கொலம்பியா வெளியீடு!



ஸரஸ்வதி

# D.K. பட்டம்மாள்

பாடிய

GE.6203 { கோபமெடுல
எந்த நேர்ச்சின



முந்திய வெளியீடு

GE.6250 { யாரோ இவர் யாரோ
...... பாகம் 1 & 2 ......

G.H.RAO

ரஸ்வதி ஸ்டோர்ஸ், மதராஸ்.

# ஸ்ரீ தியாக பிரும்ம மஹோத்சவ சபா

100-வது ஆண்டு விழா நிகழ்ச்சிகள்

## மயிலாப்பூர் பி. எஸ். ஹைஸ்கூலில்

## 2-3-46 சனிக்கிழமை தினம்

ஸ்ரீ கே. ராமுண்ணி மேனன், C. I. E., I. C. S.,
சென்னை சர்க்கார் சீப் செக்ரடரி அவர்களால்

மாலை 5-30 மணிக்கு திறப்பு விழா

சங்கீத கலாநிதி
மகாராஜபுரம் விஸ்வநாத அய்யர் சங்கீதக் கச்சேரி
(தகுந்த பக்க வாத்யங்களுடன்)

★

மேற்படி விழாவிற்காக
ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி
உதவும் சங்கீதக் கச்சேரிகள்

10—3—1946 பெஜவாடா 31—3—1946 கோயமுத்தூர்
7—4—1946 மாதுங்கா, பம்பாய்

முசிரி சுப்பிரமணிய அய்யர்,
திருவிழிமிழலை சுப்பிரமணிய பிள்ளை } கௌரவ காரியதரிசிகள்.

# புரசவாக்கம் சங்கீத சபா (Regd)

புரசவாக்கம் : : சென்னை

# ஆனந்தி - ராதா

பரதநாட்டியம்-அபிநயம்

## 23-3-46 சனிக்கிழமை மாலை 6 மணிக்கு

## மியூசியம் தியேட்டரில்

## ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி பதங்கள் பாடுவார்

★

டிக்கெட்டுகள் : ரூ. 10, 5, 3

டிக்கெட்டுகள் கீழ்க்கண்ட இடங்களில் கிடைக்கும் :

1. எஸ். ஆர். கோவிந்தராஜன், லயோலா காலேஜ், சென்னை
2. ஆர். ரகுநாதன், வில்ப்ரெட் பெரைரா லிமிடெட், வேப்பேரி
3. எஸ். கே. ராமச்சந்திரன், ஸர். எம். ஸிடி. ஹைஸ்கூல், வேப்பேரி
4. வில்ப்ரெட் பெரைரா லிமிடெட் பிராஞ்சு, 25, மவுண்டு ரோடு




மலர் 5 இதழ் 30 | 1946 மார்ச் 3 | பார்த்திப ஹு மாசி 20உ.



"கல்கி"-யில் பிரசுரமாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.

காங்கிரஸ் மகா சபையின் பொதுக் காரியதரிசி ஆசாரிய கிருபளானி ஒரு குஷிப் பேர்வழி என்று அவரைப் பார்த்த வுடனேயே தெரிந்துபோகும். 1917-ம் வருஷத்தில் அவர் மகாத்மா காந்தியின் திருக் கூட்டத்தைச் சேர்ந்தார். அது முதல் இடைவிடாமல் மகாத்மாவின் கொள்கைகளுக் கிணங்கத் தேசத் தொண்டும் காங்கிரஸ் பணியும் செய்து வருகிறார்.




சமீபத்தில் ஆசாரிய கிருபளானி சென்னை மாகாணத்தைச் சேர்ந்த மாணவர் சங்கங்களினால் அழைக்கப்பட்டு இம் மாகாணத்துக்கு விஜயம் செய்தார். தமிழ் நாட்டிலும் மலையாளத்திலும் சுற்றுப் பிரயாணம் செய்து பிரசங்க மாரி பொழிந்தார். "உங்களுடைய உள் நாட்டு விவாதங்களைக் குறித்துப் பேச நான் வரவில்லை" என்று சர்வ ஜாக்கிரதையாகப் பீடிகை போட்டுக் கொண்டு பேசினார். ஆனாலும், விவாதத்துக்கிடமான ஒரு விஷயத்தைப் பற்றி ஒவ்வோரிடத்திலும் வற்புறுத்தினார். "வந்தேமாதர" கோஷத்துக்குப் பதிலாக "ஜே ஹிந்த்" கோஷம் போடுவதை அப்பட்டமாகக் கண்டித்தார். "நேதாஜி சுபாஷ்போஸ் தேசியக் கொடியை மாற்றியிருந்தால் நீங்களும் மாற்றியிருப்பீர்கள் அல்லவா?" என்று சுருக்கெனத் தைக்கும்படி கேட்டார். "தேசியத் திட்டம் தயாரிக்கும் வேலையைத் தலைவர்களுக்கு விட்டுவிடுங்கள். அவர்கள் சொல்கிறபடி நீங்கள் கேளுங்கள்!" என்றார். இதெல்லாம் அவரை மெனக்கெட்டு அழைத்தவர்களுக்குக் கொஞ்சம் உற்சாகக் குறைவு உண்டாகத்தான் செய்தது. அதை ஸ்ரீ கிருபளானி பொருட்படுத்தினார் என்கிறீர்களோ? அவர்தான் குஷிப் பேர்வழியாயிற்றே? சிரித்துக்கொண்டே திரும்பிப் போய்ச் சேர்ந்தார். ஆசாரிய கிருபளானிக்கு ஜே! வந்தேமாதரம்! ஜே ஜே ஹிந்த்!




மலர் 5 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 30

# என்ன சேதி?

### ரயில் ஏறினார்!

மேன்மை தங்கிய சென்னை கவர்னர் சர் ஆர்தர் ஹோப் துரை அவர்கள் ஆறு வருஷ காலம் மனுநீதி தவறாமல் அரசாண்ட பிறகு, சென்ற செவ்வாய்க் கிழமையன்று மாலை சென்ட்ரல் ஸ்டேஷனில் ரயிலேறினார்.

சாதாரணமாக, கவர்னர்கள் வருவதிலோ போவதிலோ ஜனங்கள் அதிகமாக ஊக்கம் கொள்வது கிடையாது. ஏதோ அவர்கள் பாட்டுக்கு வருகிறார்கள், போகிறார்கள் — மழையையும் வெள்ளத்தையும் போல. நம்மைக் கேட்டுக் கொண்டு வருவதில்லை; நம்மைக் கேட்டுக் கொண்டும் போவதில்லை. நாமும் அவர்கள் வருகிறார்களா போகிறார்களா என்பது பற்றிக் கவலைப்படுவதில்லை.

ஆனால், இந்தத் தடவை சென்னை மாகாண கவர்னர் சர் ஆர்தர் ஹோப் ஊருக்குப் போவதில் ஒரு பெரிய விசேஷம் இருக்கிறது.

ஏனெனில், சர் ஆர்தர் ஹோப் மாத்திரம் போகவில்லை. அவருடன் சேர்ந்து இன்னொருவரும் போகிறார். அவருடைய பெயர்தான் ஸ்ரீமான் செக்ஷன் 93.

### அதிர்ஷ்டக்காரர்

சர் ஆர்தர் ஹோப் துரை ரொம்ப அதிர்ஷ்டக்காரர் என்பதைச் சென்ற ஆறு வருஷ காலமாக அவர் நடத்திவந்த அரசியலிலிருந்து நன்றாகத் தெரிந்து கொள்ளலாம்.

அவருக்குக் கிடைத்த அதிர்ஷ்டம் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் பிரதம மந்திரியாகப் பெரும் புகழுடன் விளங்கிய வின்ஸ்டன் சர்ச்சிலுக்கோ, இந்திய வைஸிராயாக இருந்த லார்ட் லின்லித்கோவுக்கோ கூடக் கிடைக்கவில்லை.

இன்னும் தெளிவாகச் சொல்லப் போனால், ஹிட்லருக்கோ முஸோலினிக்கோ கூடக் கிடைக்காத தனியதிர்ஷ்டம் இவருக்குக் கிடைத்திருந்தது!

மன்னன், 93-வது செக்ஷனைப் பையில் போட்டுக் கொண்டே வந்தார். இப்போது அதைப் பையில் போட்டுக் கொண்டே திரும்பிப் போகிறார்.

சர் ஹோப் சென்ற ஆறு வருஷகாலம் நடத்திய அரசாட்சியில், சட்டசபையைப் பார்க்கும் துர்ப்பாக்கியம் அவருக்கு ஏற்படவில்லை. சட்டசபைப் பிரதிநிதிகளைப் பார்க்கும் துர்ப்பாக்கியத்தையும் அவர் அடையவில்லை. இன்னும் மந்திரி சபைகளினால் ஏற்படும் தொந்தரவும் அவருக்கு ஏற்படவில்லை. யாருக்கும் பதில் சொல்ல வேண்டிய அவசியமே இல்லாமல் ஒரு மாகாணத்தை நிர்வகிக்கலாம் என்பதை நிரூபித்த பெருமை சர் ஆர்தர் ஹோப்புக்கே உரியதாகும்.

### பாவம், நேரம் இல்லை!

ஆனால், கவர்னர் ஹோப் சென்னை மாகாணத்தை நிர்வகித்து வந்தார் என்று சொல்வது கூட அவ்வளவு சரியல்லவென்று தோன்றுகிறது. பாவம், சர் ஆர்தர் ஹோப் துரைக்கு நிர்வாகம் நடத்துவதற்கு எங்கே நேரம் இருந்தது? இரவும் பகலும் கனவிலும் விழிப்பிலும் நிற்கும் போதும் நடக்கும்போதும் சர் ஹோப்பின் மனதையும் சிந்தனையையும் கவர்ந்தது வேறு ஒரு விஷயம் அல்லவா?

சென்ற ஆறு வருஷ காலமாக ஹோப் துரை சென்னை மாகாணத்தை நிர்வகித்தார் என்று சொல்வதைக் காட்டிலும் யுத்த நிதி வசூல் செய்தார் என்று சொல்லுவதே பொருத்தமாகும்.

யுத்தத்தைத் தம் பையில் போட்டுக் கொண்டு வந்தார் சர் ஆர்தர் ஹோப்.

இப்போது பஞ்சத்தை உண்டாக்கி விட்டுத் திரும்பிப் போகிறார்.

மகராஜராகப் போகட்டும்! அவரை ஏற்றிச் செல்லும் ரயிலும் கப்பலும் பத்திரமாக ஊர்போய்ச் சேரட்டும்!

- உம்மன்

...சிறு குழந்தைகள்கூட வெள்ளைக்காரர்களைப் ..., "வெளியேபோ!" என்று கோஷிக்கின்றன.






பர்தா மறைவிலிருக்கும் பெண்கள்கூட வெள்ளைக்காரர்கள் இந்தியாவைவிட்டு வெளியே போகவேண்டுமென்று கோஷிக்கத் தொடங்கி விட்டார்கள்.




...ன்றைக்கும் ஆதரித்தவர்களும் ...கை விட்டு விட்டார்கள்!




## மூன்று மந்திரிகள் தூது

வெளியேறுவதைத் தவிர வேறு வழி இல்லை! கப்பலைத் திருப்பி விடுங்கள்!





# கப்பலோ கப்பல்

சென்ற யுத்தத்தின் போது, இந்தியாவை ஆளும் பிரிட்டிஷ் சர்க்கார், தரைப் படை, கடற் படை, ஆகாசப் படை ஆகிய மூன்று வகைப் படைகளுக்கும் ஆள் சேர்த்தார்கள்.

"நல்ல சம்பளம்; நல்ல சாப்பாடு; ஜோரான உடுப்பு; செத்துப் போனவர்களுக்குப் பென்ஷன்; சாகாமல் திரும்பி வருகிறவர்களுக்கு நல்ல நல்ல உத்தியோகம்!" என்றெல்லாம் ஆசை காட்டி ஆள் சேர்த்தார்கள்.

இந்தியர்கள் பலர் மேற்படி மூன்று வகைப் படைகளிலும் சேர்ந்தார்கள். 'தரைப்படையிலே மட்டும் சுமார் இருபது லட்சம் இந்தியர்கள் சேர்ந்தார்கள் என்பது பிரசித்தம்.

இப்படிச் சைன்யத்தில் சேர்ந்தவர்களை நமது வாய்ச்சொல் வீரர்கள் சிலர் 'சோற்றுப் பட்டாளம்' என்று குறிப்பிட்டார்கள். 'தேசபக்தியற்றவர்கள்' 'கூலிக்கு மாரடிப்பவர்கள்' என்றெல்லாம் ஏசினார்கள்.

இதை நாம் ஆதிமுதலே எதிர்த்துக் கண்டித்து வந்தோம்.

சைன்யத்தில் சேருகிறவர்கள் சந்தர்ப்பம் நேரும்போது தங்கள் தேச பக்தியைக் காட்டுவார்கள் என்றும் அவர்கள் சைன்யத்தில் சேர்ந்து பெறுகிற பயிற்சியெல்லாம் நமது தேசத்துக்கு ஒரு நாள் பயன்படும் என்றும் கூறினோம்.

* * *

"சோற்றுப் பட்டாளம்" என்று தூற்றப்பட்ட வீரர்களிலே ஒரு பகுதியினர்தான் பர்மாவிலே நேதாஜி சுபாஷின் தலைமையில் இந்திய தேசீயப் படை ஆனார்கள். அவர்களில் சில முக்கியஸ்தர்கள் மீது டில்லி செங் கோட்டையில் இராணுவக் கோர்ட் விசாரணை ஆரம்பமான காலத்தில் தேசமே அல்லோல கல்லோலப் பட்டதை இரண்டு மாதங்களுக்கு முன்பு பார்த்தோம். அது காரணமாக ஏற்பட்ட பொதுஜனக் கிளர்ச்சி இன்னும் அடங்கிய பாடில்லை.

இப்படிப்பட்ட நிலைமையில் இந்தியக் கப்பற்படையைச் சேர்ந்த வீரர்கள் தங்களுடைய தேச பக்தியையும், சுதந்திரப் பற்றையும் பிரமாதமான முறையில் சென்ற வாரத்தில் வெ படுத்தித் தேசம் முழுவதையும் 6 கொள்ளும்படி செய்து விட்டார்கள்

இந்தியக் கப்பற்படையைச் சே மாலுமி வீரர்கள் இருபதினாயிரம் உண்ணாவிரதமும் வேலை நிறுத்த மேற்கொண்டார்கள் என்ற செ தேச மெங்கும் காட்டுத் தீயைப்போ பரவிற்று. மேற்படி வேலை நிறுத் துக்கு பிரிட்டிஷ் சர்க்காரின் அதிகாரி 'கலகம்' என்று நாமகரணம் செய அவ்விதமே அது 'கலக'மாகப் பா மித்து, ஏறக்குறைய 'புரட்சி' எ நிலைமையை அடைந்து விட்டது.

பம்பாய், கல்கத்தா, காரச்சி முத நகரங்களில் பொதுஜனக் கொந்தள ஏற்பட்டு, வேலை நிறுத்த கடையடைப்பு, ஊர்வலம், கல்லெ தடியடி, தீ வைத்தல், பகிரங் கொள்ளை, கண்ணீர்ப்புகை, துப்பாக் பிரயோகம், உயிர்ச் சேதம் எல முறையே வளர்ச்சி அடைந்தது.

நிதானத்துக்குப் பேர்போன சென் மாநகரிலும் சென்ற திங்கட்கிழ வேலை நிறுத்தம், கடை யடைப்பு, லெறி, தடியடி, துப்பாக்கிப் பிரயோ சகலமும் நடந்தன.

இப்படியெல்லாம் விபரீதம வளர்ந்த சம்பவங்களுக்கு ஆதிய காரணம் என்னவென்பதைச் ச விவரமாகப் பார்ப்போம்.

* * *

இந்தியாவுக் கென்று சில கா ஆக்கு முன்பு வரையில் கப்பற்படை இல்லாம லிருந்தது. ஏழு சமு ரங்கள் மீதும் ஆட்சி செலுத் பிரிட்டிஷ் கப்பற்படையே இந்தியாவை யும் 'பாதுகாத்து' வந்தது. த சரியல்ல, இந்தியாவுக் கென்று தனி கப்பற் படை வேண்டும் என்று பெ காலமாக இந்தியாவில் கிளர்ச்சி செய வந்தோம். அதை முன்னிட்டு, இ யுத்தத்துக்குச் சற்று முன்ன "மன்னர் பெருமானின் இந்தி கப்பற் படை" ஸ்தாபிக்கப்பட்ட ஆரம்பத்தில் மேற்படி "மன்னர் பெ மானின் இந்தியக் கப்பற் படை"ய மூன்றே மூன்று மீன் பிடிக்கும் படகு

இருந்தன! அவற்றில் சில பீரங்கி — துப்பாக்கிகளும் பொருத்தப்பட்டிருந்தன.

யுத்தத்தின் போது மேற்படி இந்தியக் கப்பற்படையானது வளர்ந்து வளர்ந்து வளர்ந்து பெரிதாகிப் பிரம்மாண்டமாகிச் சுமார் முப்பது யுத்தக் கப்பல்கள் உள்ளதாகி விட்டது! யுத்தக் கப்பல் என்றால், ஏதோ குரூஸர் என்றும், ட்ரெட்நாட் என்றும், முப்பதினாயிரம் டன் கப்பல் என்றும், ஐம்பதினாயிரம் டன் கப்பல் என்றும் கேள்விப்பட்டிருக்கிறோமே, அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை! ஏதோ குருவிக் கேற்ற இராமேசுவரம் என்பதுபோல் ஏழை இந்தியாவுக் கேற்ற சின்னஞ் சிறு கப்பல்கள்; படகுகள் என்று சொன்னாலும் தோஷமில்லை.

கடுகு சிறுத்தாலும் காரம் குறையுமா என்பது போல, இந்தியக் கப்பற்படை அளவில் சிறியதா யிருந்தாலும் சென்ற யுத்தத்தின் போது அது பிரமாதமான சேவை புரிந்ததாகச் சேனாதிபதி, வைஸ்ராய் முதலியவர்களால் பெரிதும் பாராட்டப் பெற்றிருக்கிறது.

* * *

யுத்தம் நடந்து கொண்டிருந்த வரையில் இந்திய மாலுமி வீரர்கள் யுத்த வேலைகளில் ஈடுபட்டிருந்தார்கள். யுத்தம் முடிந்த பிறகு கொஞ்சம் சிந்தனை செய்யத் தொடங்கினார்கள். தங்களுடைய வசதிக் குறைவுகள், சாப்பாட்டுக் கஷ்டங்கள், பிரிட்டிஷ் மாலுமிகளுக்கும் தங்களுக்கும் சம்பளத்திலும், அந்தஸ்திலும் உள்ள தாரதம்மியங்கள் ஆகியவற்றைக் குறித்து யோசனை செய்யலானார்கள். மேலதிகாரிகள் தங்களை அடிக்கடி அவமரியாதையாக நடத்துவது அவர்களுடைய மனதை மிகவும் புண்படுத்தியது. இதெல்லாம் இந்தியா அன்னிய ஆட்சியில் இருப்பதினால்தானே என்ற உண்மையும் உதயமாயிற்று.

தீ மேலையானது உள்ளுக்குள் குமுறிக் கொண்டு எங்கே வெடித்து நெருப்பைக் கக்கலாம் என்று அங்கு மிங்கும் முட்டி மோதிக் கொண்டிருந்தது.

படார் என்று அது வெடிப்பதற்கு ஓர் இடம் — ஒரு சந்தர்ப்பம் — தல்வார் என்னும் கப்பலின் அதிகாரி கமாண்டர் கிங் என்பவரால் அளிக்கப்பட்டது.

தல்வார் என்னும் கப்பல், இந்திய மாலுமிகளுக்குத் தந்தி மூலமும், ரேடியோ மூலமும், சமிக்ஞைகள் மூலமும் செய்தி அனுப்பும் பயிற்சி அளிப்பதற்காக ஏற்பட்டதாகும். எனவே அதில் இருந்த இளம் மாலுமிகள் எல்லாரும் கல்வி அறிவு படைத்தவர்கள். அவர்களில் ஒருவரான ஆர். கே. சிங் என்பவர் சென்ற 1945 டிசம்பரில் மேலதிகாரிகள் மாலுமிகளை அவமரியாதையாக நடத்துவது பற்றிப் புகார் செய்தார். அதன் பயனாக இரண்டு மாதம் சிறைத் தண்டனை அடைந்தார். நாளது பிப்ரவரி மாத ஆரம்பத்தில் பி. சி. தத் என்பவர் கப்பல் தளத்தில் "ஜெ ஹிந்த்!" கோஷத்தை எழுதினார். இதற்காக அவர் உத்தியோகத்திலிருந்து தள்ளப்பட்டார்.

இதனை யெல்லாம் மனம் வெதும்பிக் கொண்டிருந்த இளம் மாலுமிகள் இருக்கும் இடத்துக்கு கமாண்டர் கிங் ஒரு நாள் வந்து அவர்களை வெகு மரியாதையாக "நாய்களின் புத்திரர்களே!" என்றும், "கூலிகளே! காட்டான்களே!" என்றும் அழைத்ததாகச் சொல்லப்படுகிறது.

இவ்வித மரியாதைகளுக்கு ஆளான மாலுமிகள் மேலதிகாரிகளுக்குப் புகார் எழுதினார்கள். மறுபடியும் கமாண்டர் கிங் வந்து மிரட்டினார். இதன்பேரில், அந்த மானமுள்ள இளைஞர்கள் பிப்ரவரி 17-ல் உண்ணாவிரதமும் 18-ல் வேலை நிறுத்தமும் ஆரம்பித்தார்கள்.

இவ்விதம் தல்வார் கப்பலில் ஆரம்பமான கிளர்ச்சி பம்பாய், கராச்சி, கல்கத்தா முதலிய எல்லா இடங்களுக்கும் பரவி இந்தியக் கப்பற் படையைச் சேர்ந்த எல்லா மாலுமி வீரர்களும் ஒருமுகமாக வேலை நிறுத்தம் செய்தார்கள். அவர்களிடம் அநுதாபங் காட்டி இந்திய ஆகாசப் படையைச் சேர்ந்தவர்களும் பல இடங்களில் வேலை நிறுத்தம் செய்தார்கள்.

* * *

மேற்படி வேலை நிறுத்தச் செய்தி தேசமெங்கும் பரவி, தேசமக்கள் சகலமானவர்களையும் ஒரு குலுக்குக் குலுக்கி விட்டது. தேசமே அல்லோலகல்லோலப்பட்டது.

இந்திய சட்டசபையில் மாலுமிகளின் கோரிக்கையை ஆதரித்து அவசரத் தீர்மானம் நிறைவேறியது.

இந்தியக் கப்பற்படைத் தலைவரான அட்மிரல் காட்பீர், "கலகம் நீடித்தால் இந்தியக் கப்பற் படையே நிர்மூலமாகி விடும்!" என்று எச்சரித்தார்.

பெரிய பிரிட்டிஷ் யுத்தக் கப்பல்கள் பம்பாயை நோக்கி வரலாயின!

ஸ்ரீமதி அருணா ஆஸப் அலி பம்பாய்க்குச் சென்று தம்மாலான வாக்கு சகாயத்தைச் செய்தார்.

மகாத்மா காந்தி அஹிம்சா தர்மத்தை வற்புறுத்தி ஞாபகப்படுத்தினார்.

ஜனாப் ஜின்னாவும் ஒரு ஸ்டேட்மெண்ட் கொடுத்து வைத்தார்.

கடைசியாக, தீரர் வல்லபாய் படேல் முழுப் பொறுப்பையும் தமது தலையிலே எடுத்துப் போட்டுக்கொண்டு, "வேலை நிறுத்தத்தை முடிவு செய்யுங்கள்; பலாபலன்களுக்கு நான் ஜவாப்தாரி" என்று சொல்ல, அதன் பேரில் மாலுமிகள் வேலை நிறுத்தத்தையும் எதிர்ப்பையும் கைவிட்டு நிபந்தனையின்றிப் பணிந்தார்கள்.

மேலே என்ன நடக்கப் போகிறது என்று இப்போது சொல்வதற்கில்லை.

வைஸராய் வேவலும் சேனாபதி ஆக்கின்லக்கும் இந்திய தேசத் தலைவர்களின் ஆலோசனைக்குச் செவி கொடுத்து, நமது புகழ் பெற்ற இந்தியக் கப்பற் படையைக் காப்பாற்றிக் கொடுப்பார்கள் என்று நம்புவோமாக.

*　　*　　*

மேற்படி இந்தியக் கப்பற் படை வேலை நிறுத்தம் அல்லது கலகத்தினால் தேசத்தில் மற்றப்படி நேர்ந்த விபரீதங்களைச் சிறிது கவனிப்போம். பம்பாயில் மூன்று தினங்கள் நடந்த அமளி துமளியினால் 250 பேர் மாண்டனர். 1300 பேருக்கு மேல் காயமடைந்தார்கள். பல கடைகள் சூறையாடப் பட்டன. ரயில்வே ஸ்டேஷன், தபாலாபீஸ் முதலிய பொதுக் கட்டிடங்கள் அக்கினி பகவானுக்கு இரையாயின.

தேசம் பஞ்சத்தை எதிர்நோக்கிக் கொண்டிருக்கும் இச்சமயத்தில் 200 லட்சம் ராத்தல் தானியங்களும், ஒன்றரை லட்சம் ராத்தல் சர்க்கரையும் நாசமாயிற்று.

பம்பாய் நகரசபைக்கு மட்டும் 7 லட்சம் ரூபாய் சொத்து நஷ்டம். மொத்தத்தில் ஒரு கோடி ரூபாய்க்கு மேல் சொத்து நஷ்டம் ஏற்பட்டிருந்தாலும் அதிசயப் படுவதற்கில்லை.

நாசமடைந்த சொத்தெல்லாம் நம்முடையவை: நாளை இந்தியாவை விட்டு ஓடப் போகும் இங்கிலீஷ்காரர்களுடைய சொத்துக்கள் அல்ல.

எனவே, இந்த மாதிரி வெறி பிடித்த நாசவேலைகளைக் குறித்து எல்லா தேசத் தலைவர்களும் மனம் வருந்திக் கண்டித்திருக்கிறார்கள். மகாத்மா காந்தி, மௌலானா ஆஸாத், ஜவாஹர்லால், வல்லபாய், ஜனாப் ஜின்னா, நமது வரதராஜுலு நாயுடு காரு உள்பட எல்லாருமே கண்டித்திருக்கிறார்கள்.

*　　*

இதில் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய விஷயம் ஒன்று இருக்கிறது. அதாவது "பம்பாயில் வேலை நிறுத்தமும் கடை யடைப்பும் வேண்டாம்!" என்று ஸ்ரீ வல்லபாய் எச்சரித்தார். ஜனங்கள் அதைக் கேட்கவில்லை.

சென்னையிலேகூட "இங்கட்டுமுறை நடந்த வேலை நிறுத்தம் காங்கிரஸ் கமிட்டியார் செய்யச் சொல்ல வில்லை" என்று தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர் அறிக்கை விட்டிருக்கிறார்.

பின்னே யாருடைய தூண்டுதலால் கடை யடைப்பும், வேலை நிறுத்தமும் ஆரம்பமாயின?

பம்பாயிலும் சரி, சென்னையிலும் சரி, கம்யூனிஸ்ட் தலைவர்கள் மேற்படி வேலை நிறுத்தங்களை ஏற்பாடு செய்ததாகத் தெரிய வருகிறது.

கம்யூனிஸ்ட் கட்சியாருக்குத் திடீரென்று இவ்வளவு பொது ஜனச் செல்வாக்கு எப்படி ஏற்பட்டது?

இதே பம்பாயில், இதே ஜனங்கள், ஒரு மாதத்துக்கு முன்னால் கம்யூனிஸ்ட் கட்சிக் காரியாலயத்தைத் தாக்கிக் கொளுத்தி நாசம் செய்தார்களே!

அதற்குள் என்ன இந்த மாறுதல்?

விஷயம் இதுதான்: தற்சமயம் இந்தியப் பொது மக்களின் கொந்தளிப்பான மனோ நிலையில் இம்மாதிரி அமளி துமளியான காரியங்களில் அவர்களை ஈடுபடுத்துவது மிகவும் சுலபமாகும்.

குறிப்பிட்ட தலைவர்தான் சொல்ல வேண்டும், குறிப்பிடப்பட்ட ஸ்தாபனந்தான் கட்டளையிட வேண்டும் என்பது கிடையாது. யாராவது ஒருவர் முன் வந்து சொல்ல வேண்டியது தான். ஏதாவது ஒரு சந்தர்ப்பம் அல்லது சாக்குக் கிடைக்க வேண்டியதுதான். உடனே எங்கே பார்த்தாலும், முக்கியமாகப் பெரிய நகரங்களில், அமளி துமளியைக் காணலாம். அப்படிப் பொது மக்களின் உள்ளம் கொந்தளித்துக் கொண்டிருக்கிறது.

திடீரென்று இத்தகைய கொந்தளிப்பு ஏற்படுவானேன்? இத்தனை நாளும், எட்டு மாதத்துக்கு முன்னால் கூட நாம் கண்டறியாத தீவிர தேச பக்தியும், சுதந்திர ஆவேசமும் இந்தியப் பொது மக்களுக்கு எப்படி வந்தது? எங்கிருந்து வந்தது?

இதற்கெல்லாம் ஒரே ஒரு பதில் உண்டு; ஒரே ஒரு காரணந்தான் சொல்ல முடியும்.

"இந்தியா கூடிய சீக்கிரத்தில் சுதந்திரம் அடையப் போகிறது!" என்ற உறுதியான நம்பிக்கை இப்போது இந்தியாவில் எல்லா ஜனங்களுடைய மனதிலும் ஏற்பட்டிருப்பதுதான்.

காரிய சித்தியாகப் போகும் கடைசி நேரத்தில் அவசரமும் பரபரப்பும் அடைவது மனித சுபாவம். இதற்கு ஓர் உதாரணம் பார்ப்போம்.

* * *

கடலிலே பல நாட்கள் கப்பல் பிரயாணம் செய்து வருகிறோம். தண்ணீர், தண்ணீர், தண்ணீர் — எங்கும் தண்ணீர் மயமாயிருக்கிறது. கரையைக் காணமாட்டோமா, பச்சை மரங்களைப் பார்க்க மாட்டோமா என்று மனம் ஏங்குகிறது. "ஏதோ கப்பல் வழி தப்பி விட்டது; கரையையே நாம் காணப் போவதில்லை!" என்று நிராசை யடைந்திருக்கும் சமயத்தில் ஒரு நாள் காலை திடீரென்று பச்சை மரங்கள் தென்படுகின்றன. "அதோ கரை!" என்று மனம் எக்களிக்கிறது. உடனே ஒரே தாண்டாகத் தாண்டிக் கரையில் குதிக்க மாட்டோமா என்று பரபரப்பு உண்டாகிறது. மூன்று மாத காலம் கப்பலில் பிரயாணம் செய்தது பெரிதாகத் தோன்றவில்லை; கரை சேர இன்னும் மூன்று மணி நேரம் பாக்கி இருக்கிறதே என்று ஆத்திரம் பொங்குகிறது.

இத்தகைய மனோ நிலையில்தான் இந்தியப் பொது மக்கள் இப்போது இருக்கிறார்கள். இதைச் சர்க்கார் அதிகாரிகள் உணர வேண்டும். உணர்ந்து சர்வ ஜாக்கிரதையாக நடந்துகொள்ள வேண்டும்.

சர்க்கார் அதிகாரிகள் அவ்விதம் உணர்ந்து நடந்தால் மட்டும் போதாது. நமது தேசத் தலைவர்களும் உணர வேண்டும்.

இன்னும், அறிவும் சிந்தனா சக்தியும் உள்ளவர்கள் அனைவரும் மேற்படி விஷயத்தை யோசித்துப் பார்த்துப் பொது மக்களுக்கும் உணர்த்த முயல வேண்டும்.

நமது தேசத் தலைவர்கள் சுதந்திரக் கப்பலை எவ்வளவோ பாடுபட்டுக் கரை அருகில் கொண்டுவந்து விட்டார்கள்.

இந்தக் கடைசி நேரத்தில் ஜனங்கள் அவசரமும் பரபரப்பும் காட்டுவதினால் பெரும் அபாயம் நேரிடலாம்.

படகு வந்து அதில் ஏறிக்கொண்டு போவதற்கு வேண்டிய பொறுமை யில்லாமல் கப்பலிலிருந்து கடலிலே குதித்தால் அலைகளால் மோதுண்டு சாக நேரலாம்; அல்லது சுறா மீன்களுக்கு இரையாக நேரிடலாம்!

* * *

கப்பலில் ஏறி வந்த பிரயாணிகளைக் காட்டிலும் கப்பலை ஓட்டி வந்த மாலுமிகளுக்கு அதிக நிதானமும் முன் யோசனையும் வேண்டும்.

மகா சமுத்திரத்தில் ஆயிரக்கணக்கான மைல் கப்பலை விட்டுக் கொண்டு வந்த பிறகு, கரையோரத்தில் அவசரப்பட்டு நிதானந் தவறுவதால் கப்பல் கரை தட்டி உடைந்து நாசமான சம்பவங்கள் எத்தனையோ உண்டு.

இதையெல்லாம் நமது தேசத் தலைவர்கள் நன்கு உணர்ந்திருக்கிறார்கள்.

"சுயராஜ்யம் நமக்கு நிச்சயம் வரத்தான் போகிறது; பம்பாயில் நடந்தது போன்ற சம்பவங்கள் அநாவசியம்" என்று மௌலானா ஆஸாத் கூறுகிறார்.

"நமக்குச் சுதந்திரம் கைமேல் கிடைக்கப் போவது நிச்சயம். அதை நடத்துவதற்கு வேண்டிய கட்டுப்பாடு தான் நம்மிடம் இல்லை!" என்று ஜவாஹர்லால்ஜி பம்பாய்க்கு வந்து பார்த்து விட்டுக் கூறுகிறார்.

காந்தி மகாத்மா தமிழ்நாட்டுக்கு வந்திருந்தபோது, "சுயராஜ்யம் சில மாதத்தில் வரப்போகிறது; அதற்கு வேண்டிய தகுதியையும் கட்டுப்பாட்டையும் சம்பாதித்துக் கொள்ளுங்கள்!" என்று அடிக்கடி எச்சரிக்கை செய்தார். தற்சமயம் பூனாவிலிருந்தும் அதே எச்சரிக்கையைச் செய்து வருகிறார். ஸ்ரீ வல்லபாய் படேலும் அதே ரீதியில் தான் இப்போது பேசி வருகிறார்.

நமது அரும் பெருந் தலைவர்களை யெல்லாம் நாம் 'மிதவாதிகள்' என்று பட்டம் சூட்டித் தள்ளி விடுவதற்கில்லை. அவர்கள் மேற்கண்டவாறு எச்சரிக்கை செய்வது மிகவும் அவசியம். அதைப் பின்பற்றி மகா ஜனங்கள் நடந்து கொள்வது இன்னும் ரொம்ப அவசியம்.

ஏனெனில், சுயராஜ்யக் கப்பல் கரைக்கு மிகவும் அருகாமையில் வந்து விட்டது. அதை ஜாக்கிரதையாகவும் நிதானமாகவும் நிறுத்திப் பிரயாணிகளுக்குச் சேதமில்லாமல் இறக்கி விடுவதுதான் இப்போது முக்கியமான காரியமாகும்.

# சிவகாமியின் சபதம்

கல்கி

## அத்தியாயம் 23

## நிலவில் நண்பர்கள்

வானக் கடலில் மிதந்த பூரண சந்திரன் பால் நிலவைப் பொழிந்து இந்த மண்ணுலகத்தை மோகனப் பொன்னுலகமாகச் செய்து கொண்டிருந்த இரவில், வட பெண்ணை நதியானது அற்புதக் காட்சியை அளித்துக்கொண்டிருந்தது.

முதல் நாளிரவு அதே நேரத்தில் அந்த நதியைப் பார்த்திருந்தோமானால், 'சலசல' வென்ற இனிய ஓசையோடு அம் மாநதியில் ஓடிய தண்ணீர்ப் பிரவாகம் உருக்கிய வெள்ளியைப் போல் தகதக வென்று பிரகாசிப்பதையும், நாலா புறமும் கண் வட்டம் பூமியைத் தொட்டு ஒன்றாகும் வரம்பு வரையில் பூரண அமைதி குடிகொண்டிருப்பதையும் கண்டிருப்போம். அந்த இயற்கை அமுதக் காட்சியின் இன்பத்தில் மெய்மறந்திருப்போம். பிரவாகத்தையொட்டி விரிந்து பரந்து கிடக்கும் வெண் மணலிலே படுத்துக் கொண்டு "ஆகா! இது என்ன அற்புத உலகம்? இவ்வுலகத்திலே ஒருவன் அடையக் கூடிய ஆனந்தம் சொர்க்க லோகத்திலேதான் கிடைக்குமா?" என்று வியந்திருப்போம்.

ஆனால், இன்றிரவோ அந்த வட பெண்ணை நதித் துறையானது மகத்தான அல்லோல கல்லோலத்துக்கு உள்ளாகியிருந்தது.

கணக்கற்ற யானைகளும், குதிரைகளும், ரதங்களும், வண்டிகளும் அந்த நதியை அப்போது கடந்து கொண்டிருந்தன. யானைகள் அணிந்திருந்த தங்க முகபடாங்களும், அவற்றின் தந்தங்களுக்கு அணிந்திருந்த வெள்ளிப் பூண்களும், இயற்கையிலேயே அழகுடைய புரவிகளுக்குப் பூட்டியிருந்த நானாவித ஆபரணங்களும், ரதங்களின் தங்கத் தகடு வேய்ந்த விமானங்களும் வெண்ணிலவில் பளபளவென்று ஜொலித்தன.

யானைகள், குதிரைகள் எல்லாம் வரிசை வரிசையாக ஏக காலத்தில் நெடுந்தூரத்துக்கு நெடுந்தூரம் நதியை அடைத்துக் கொண்டு நீர்ப்பிரவாகத்தைக் கடந்தபோது ஏற்பட்ட ஓசை, பெருங் காற்று அடிக்கும்போது அலை வீசிக் குமுறும் சமுத்திரத்தின் பேரிரைச்சலை ஒத்திருந்தது.

அக்கரையில், கண்ணுக் கெட்டிய மட்டும் காலாட் படையைச் சேர்ந்த வீரர்கள் காணப்பட்டனர். அவர்களுடைய கையிலே பிடித்திருந்த கூரிய வேல்கள் அசைந்த போதெல்லாம் மின்வெட்டின் ஒளி தோன்றி கண்ணைப் பறித்தது. அந்த வீர கூட்டத்துக்கு இடையிடையே ஆயிரக் கணக்கான ரிஷபக் கொடிகள் இளங் காற்றில் பறந்து படபடவென்று சப்தித்துக் கொண்டிருந்தன.

இந்தக் கரையில் நதித் துறைக்குச் சற்றுத் தூரத்தில் ஒரே ஒரு கூடாரம் மட்டும் காணப்பட்டது.

கூடாரத்துக்குப் பக்கத்தில் புல் தரையில் விரித்திருந்த ரத்தின

ம்பளத்தின்மேல் யாரோ நாலு பேர்
ட்கார்ந்து பேசிக் கொண்டிருக்
ர்கள். அவர்கள் கையைத் தட்டிக்
ப்பிட்டால் கேட்கக் கூடிய தூரத்
ல், பத்துப் பன்னிரண்டு வீரர்கள்
கயில் நீண்ட வேல்களுடனும் இடை
ல் செருகிய வாள்களுடனும் சர்வ
ரக்கிரதையுடன் காவல் புரிந்து
ாண்டிருந்தார்கள். இதிலிருந்து
ந்தினக் கம்பளத்தில் உட்கார்ந்திருப்
பர்கள் பெரிய அந்தஸ்துப் படைத்த
க்கியஸ்தர்கள் என்று ஊகிக்கலாம்.

அருகில் சென்று பார்த்தோமானால்,
து ஊகம் உண்மை என்பதைக்
ண்போம். அந்த நால்வரும் மாமல்ல
க்கரவர்த்தி, சேனாதிபதி பரஞ்சோதி,
பங்கி அரசன் ஆதித்த வர்மன்,
ற்றர் தலைவன் சத்ருக்னன் ஆகி
பர்கள் தான்.

* * *

வேங்கி அரசன் ஆதித்த வர்மன்
மல்லருடைய தாயாதி சகோதரன்.
தாவது சிம்ம விஷ்ணு மகாராஜா
ன் சகோதரன் வம்சத்தில் வந்தவன்.
ந்த வம்சத்தினர் வேங்கி சாம்
ஜ்யத்தின் வடபகுதியில் கோதா
க்கு அப்பாலுள்ள பிரதேசத்தைச்
தந்திரச் சிற்றரசர்களாக ஆண்டு
ந்தார்கள்.
சளுக்க சக்கரவர்த்தி காஞ்சியின்மீது
டையெடுத்து வந்தபோது, ஆதித்த
மன் பல்லவ சக்கரவர்த்தியின்
தவிக்கு வர முடியாதபடி இடையில்
லிகேசியின் சகோதரன் விஷ்ணு
த்தனனால் வழிமறிக்கப்பட்டான்.
ஷ்ணு வர்த்தனன் வேங்கியின்
ாதன இராஜ வம்சத்தை நிர்மூலம்
ய்து தான் சிம்மாசனம் ஏறியதும்,
னல் புலிகேசி தென்னாட்டிலிருந்து
தாபிக்குத் திரும்பி வருவதற்குள்
ஷ்ணு வர்த்தனன் உயிர் துறந்ததும்
டர்கள் அறிவார்கள்.

விஷ்ணு வர்த்தனனுடைய ஆட்சி
யையும் ஆயுளையும் அகாலத்தில் முடிவு
ய்யக் காரணமாயிருந்தவன் ஆதித்த
மன் தான்.

ஆனால் சில வருஷத்துக்குப் பின்னர்
ண்டும் புலிகேசியின் பெரும் சைன்
வேங்கியைக் கைப்பற்ற வந்த
ாது, ஆதித்த வர்மன் தன்னுடன்
சம் இருந்த வேங்கி சைன்யத்

துடனே தென்திசை நோக்கிப் பின்
வாங்கித் தக்க சந்தர்ப்பத்தை நோக்கிக் காத்திருந்தான்.

மாமல்லர் மாபெரும் சைன்யத்தோடு வாதாபியின் பேரில் படையெடுத்த போது, ஆதித்த வர்மனும் அவரோடு சேர்ந்து புறப்பட்டான்.

* * *

சேனாதிபதி பரஞ்சோதி பன்னிரண்டு வருஷத்துக்கு முன்னால் தாம் இதே வடபெண்ணையின் அக்கரையில் புலிகேசியின் சேனா சமுத்திரத்தைப் பார்த்துப் பிரமிப் படைந்தது பற்றியும், மகேந்திர பல்லவர் மாறு வேடம் பூண்டு தன்னைப் பின் தொடர்ந்து வந்து, புலிகேசியின் கண்ணெதிரே தன்னை விடுதலை செய்தது பற்றியும் விவரமாகச் சொல்லிக் கொண்டிருந்தார்.

மற்ற மூவரும் அதிசயத்தோடு கேட்டுக் கொண்டிருந்தனர். மூவரிலும் ஆதித்த வர்மன் அதிக அதிசயப்பட்டான். அவனுக்கு அந்த விவரங்கள் எல்லாம் புதிதாக இருந்தன.

"ஆகா! அந்த விசித்திர சித்தரை நேரில் பார்க்கும் பாக்கியம் இந்தக் கண்கள் கொடுத்துவைக்க வில்லையே!" என்று வருந்தினான்.

அப்போது மாமல்லர் சொன்னார்:—

"இலங்கை இளவரசன் கூட அடிக்கடி இவ்விதம் கூறி வருத்தப்படுவான். என் தந்தை என்பதற்காக நான் பெருமை யடித்துக் கொள்ள வில்லை. ஆனாலும் அவரைப் பார்ப்பதே ஒரு பாக்கியந்தான். அவருடன் நெருங்கிப் பழகுவதற்கோ பல ஜன்மங்களிலே பாக்கியம் செய்திருக்க வேண்டும். மூன்று வருஷ காலம் அவர் என்னை அழைத்துக் கொண்டு தென் தேச மெங்கும் யாத்திரை செய்தார். இந்த மாதிரி வெண்ணிலவு பொழிந்த இரவுகளிலே நானும் அவரும் வெட்ட வெளியில் உட்கார்ந்து ஆனந்தமாகக் காலம் கழித்திருக்கிறோம். அவர் பிரயாணம் கிளம்பும்போது பரிவாதினி வீணையையும் உடன் எடுத்து வருவார். வீணைத் தந்திகளை மீட்டி அவர் இசை வெள்ளத்தைப் பெருக்கும் போது, வானமும் பூமியும் நிச்சலமாய், நிச்சலனமாய் நின்று கேட்பதுபோலத்

தோன்றும். அந்த நாத வெள்ளத்தைத் தடை செய்யப் பயந்து காற்றும் நின்று விடும். மரங்களின் இலைகள் அசைய மாட்டா. பட்சி ஜாலங்களும் மௌன விரதம் பூண்டிருக்கும்......"

"அண்ணா! நிறுத்துங்கள்! இப்படி நீங்கள் பேச ஆரம்பித்தால், எனக்குச் சித்தம் கலங்கி விடுகிறது. யுத்தமும் இரத்தக் களரியும் என்னத்திற்கு, — வீணை வாசிக்கக் கற்றுக் கொண்டு வாழ்க்கையை ஆனந்தமாகக் கழித்து விட்டுப் போகலாமென்று தோன்றி விடுகிறது!" என்றான் ஆதித்தவர்மன்.

மாமல்லர் கலகலவென்று சிரித்து விட்டுச் சொன்னார் :— "மகேந்திர பல்லவர் இதேமாதிரி வார்த்தைகளை ஒரு காலத்தில் சொன்னதுண்டு. 'உலகத்தில் மன்னர் குலத்தில் பிறந்தவர்களுக்கு மண்ணாசை என்பது போய் விட்டால் இந்தப் பூவுலகமே சொர்க்கமாகிவிடும்!' என்று சொல்வார். 'உலகத்தில் யுத்தம் என்பதே உதவாது. வேல், வாள் முதலிய போர்க் கருவிகளையே யாரும் செய்யக் கூடாது. கொல்லர் உலைகளிலே பூமியை உழுவதற்கு ஏர்க் கொழுக்களும், சிற்பக் கலைஞர்களுக்கு வேண்டிய சிற்றுளிகளுந்தான் செய்யப் படவேண்டும்' என்று என் தந்தை அடிக்கடி கூறுவார். ஆனால் என்றைய தினம் சளுக்கன் பல்லவ நாட்டின்மீது படையெடுத்ததாகச் செய்தி வந்ததோ அன்றைய தினமே அவருடைய மனம் அடியோடு மாறிவிட்டது. ஆயிரம் சிற்பிகள், பதினாயிரம் சித்திரக்காரர்களைக் காட்டிலும் மதயானைமீது வேல் எறிந்த இளைஞன் அவருடைய மனதை அதிகமாகக் கவர்ந்து விட்டான்!......" என்று கூறி மாமல்லர் சேனாபதி பரஞ்சோதியைப் பார்த்துப் புன்னகை புரிந்தார்.

"நமது சேனாபதி காஞ்சி நகரில் பிரவேசித்த அன்று நடந்த சம்பவத்தைத்தானே குறிப்பிடுகிறீர்கள்? அதைப் பற்றி ஒருநாள் அவரிடம் நானே விவரமாகக் கேட்க வேண்டுமென்றிருந்தேன்" என்றான் ஆதித்த வர்மன்.

"என் தந்தையின் அபிமானத்தை நமது சேனாபதி கவர்ந்தது போல் வேறு யாரும் கவர்ந்ததில்லை. ஒவ்

வொரு சமயம் எனக்கு அவர்மே
பொறாமைகூட உண்டாயிற்
மகேந்திர பல்லவர் என்னைப் பு
கணித்து விட்டுச் சேனாபதிக்கே மு
சூட்டி விடுவாரோ என்று கூடச் சி
சமயம் சந்தேகித்தேன். ஆனா
அதற்கு நானும் ஆயத்தமா யிரு
தேன். இன்றைக்குக் கூடச் சே
பதி ஒப்புக்கொண்டால்......" என்
மாமல்லர் சொல்லி வந்தபோ
தளபதி பரஞ்சோதி குறுக்கிட்டார்.

"பிரபு! இப்படியெல்லாம் பே
வேண்டாம். சாம்ராஜ்யம், சிம்ப
சனம் எல்லாம் எனக்கு என்ன
திற்கு? பட்டிக் காட்டில் ஏழை
குடும்பத்தில் பிறந்தவன் நான். எ
தாயாரிடம் 'கல்வி பயின்று வ
கிறேன்' என்று வாக்குக் கொடுத்
விட்டுக் காஞ்சிக்கு வந்தேன். பன்
ரண்டு வருஷத்துக்கு மேல் ஆகியு
அந்த வாக்கை நிறைவேற்
பாடில்லை. இன்னும் நிரட்சர குட்
யாகத்தான் இருக்கிறேன். இ
யுத்தம் முடிந்ததும் என் தாயாருக்
நான் கொடுத்த வாக்கை நிறைவேற்ற
போகிறேன். சிம்மாசனத்தை யாருக்க
வது கொடுத்துத்தான் ஆகவேண்டு
என்றால், இலங்கையிலிருந்து ஒருவ
வந்து காத்துக் கொண்டிருக்கிறா
அவருக்குக் கொடுங்கள்!" என்றார்.

மாமல்லர் உடனே ஆதித்த வர்மனை
யும் சத்ருக்னனையும் பார்த்து
கண்ணினால் சமிக்ஞை செய்ய, அ
களும் விஷயம் தெரிந்து கொண்
தற்கு அடையாளமாகப் புன்ன
புரிந்தார்கள்.

மாமல்லர் மானவன்மனிடம் அதி
பிரியம் வைத்திருக்கிறார் என்
விஷயம் சேனாபதி பரஞ்சோதியி
மனதில் உறுத்திக் கொண்டே
இருந்தது. இதை மாமல்லர் நன்
அறிந்திருந்தார். வாதாபி யுத்த
துக்கு மானவன்மனை வரவேண்ட
மென்று காஞ்சியில் அவர் நிறுத்
விட்டு வந்ததற்கே இதுதான் முக்கி
மான காரணம்.

எனவே, மாமல்லர் மற்ற இருவரை
யும் பார்த்து, "பார்த்தீர்களா, நா
சொன்னது சரியாய்ப் போயிற்று.
என்று சொல்வதற்கு அறிகுறியாக
சமிக்ஞை செய்து விட்டு, தலைகுனி

வண்ணமிருந்த பரஞ்சோதியைப் பார்த்து, "அழகாய்த்தானிருக்கிறது! போயும் போயும் அந்த மூடனிடமா மகேந்திர பல்லவர் ஆண்ட ராஜ்யத்தை ஒப்புவிக்கச் சொல்கிறீர்? அவனை நான் வரவேண்டாம் என்று கண்டிப்பாகச் சொல்லியிருந்தும் அவன் பாட்டுக்குப் புறப்பட்டு வருகிறான். அவனுக்கு என்ன தண்டனை கொடுக்கலாம் என்று யோசித்துக் கொண்டிருக்கிறேன். எனக்கு அவன் மேல் வரும் கோபத்துக்கு அளவேயில்லை. இலங்கைக்கே திருப்பி விரட்டி விடலாமா என்று தோன்றுகிறது! சேனாபதி! உம்முடைய அபிப்பிராயம் என்ன?" என்று கேட்டார்.

சேனாபதி சற்று யோசனை செய்துவிட்டு, "போர்க்களத்துக்கு வர வேண்டுமென்று அவ்வளவு ஆவல் உள்ளவரை எதற்காகத் தடுக்க வேண்டும்? மானவன்மர் வந்தால் நல்லதுதான். நமது யானைப் படைக்கு அவர் தலைமை வகித்தால் எவ்வளவோ நன்றாயிருக்கும்" என்றார்.

"எனக்கு என்னமோ சுத்தமாய்ப் பிடிக்கவில்லை. மானவன்மன் நம்முடைய உதவியைக் கோரி வந்து அடைக்கலம் புகுந்தவன். இப்போது அவனுடைய உதவியினால் நாம் ஜயித்தோம் என்று எதற்காக ஏற்பட வேண்டும்?......" என்றார் மாமல்லர்.

அதுவரை ஏறக்குறைய மௌனமாயிருந்த சத்ருக்னன் கூறினான்:—

"சக்கரவர்த்தி! தாங்கள் அவ்விதம் எண்ணவே கூடாது. இந்த யுத்தத்தில் ஜயிப்பதற்குத் தங்களுக்கு யாருடைய ஒத்தாசையும் தேவையில்லை. தங்களிடம் இல்லாத போர்த் திறமை வேறு யாரிடம் இருக்கிறது? சேனாபதியும் ஆதித்த வர்மரும் இல்லாவிட்டாலும் தாங்கள் வாதாபியை அழித்து விட்டு வெற்றி வீரராய்த் திரும்புவீர்கள். இந்தப் படையெடுப்பில் கலந்து கொள்வதற்குக் கொடுத்து வைத்தவர்கள் பாக்கியசாலிகள். மானவன்மர் இந்தப் படையெடுப்பிலே கலந்து கொண்டால் அவரால்தான் தாங்கள் ஜயமடைந்தீர்கள் என்ற பெயர் ஒரு நாளும் ஏற்பட்டு விடாது. அதனால் அவருக்குக் கௌரவம் ஏற்படும் என்பதுதான் உண்மை!"

சத்ருக்னன் கூறியதை சேனாபதி, ஆதித்த வர்மன் இருவரும் பூரணமாக ஆமோதித்தார்கள்.

"மேலும், நமது யானைப் படைக்குப் பயிற்சி அளிக்கும் காரியத்தில் மானவன்மர் மிக்க சிரத்தை எடுத்துக் கொண்டிருக்கிறார். அவரைப் போருக்கு வரவேண்டாம் என்று சொல்வது நியாயமல்ல!" என்றார் சேனாபதி.

"யானைப் படைக்கு ஏதோ புதுவிதமான பயிற்சி இலங்கை இளவரசன் அளித்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். அது என்ன புதுப் பயிற்சி?" என்று ஆதித்த வர்மன் கேட்டான்.

"அது உண்மைதான். முன்னெல்லாம் கோட்டை வாசல் கதவுகளை உடைப்பதற்கு யானைகளை முட்ட விடுவது வழக்கம். காஞ்சிக் கோட்டை முற்றுகையின் போது மகேந்திர பல்லவரின் முன் யோசனையினால் அந்தப் பழைய முறை பலிக்காமல் போயிற்று. கோட்டைக் கதவுகளிலே ஈட்டி முனைகளைப் பொருத்தி யிருந்தபடியால், ஒரு தடவை மோதியதுமே யானைகள் வெறிகொண்டு திரும்பி ஓடிப்போயின. இப்போது மானவன்மர் நமது யானைகளுக்கு இரும்பு உலக்கைகளால் கதவுகளைப் பிளக்கவும், கோட்டைச் சுவர்களைக் கடப்பாறைகளைக் கொண்டு இடிக்கவும், தீவர்த்திப் பந்தங்களைத் தூக்கி வீசிக் கோட்டைக்குள் எறியவும் கற்பித்திருக்கிறார்."

"ஆகா! இதுவரை இம்மாதிரி யானைப் படையை உபயோகித்ததாக நான் கேட்டதே இல்லை!" என்றான் ஆதித்த வர்மன்.

சேனாபதி பரஞ்சோதிக்கு மானவன்மரிடம் தனிப்பட்ட முறையில் விரோதம் எதுவும் கிடையாது. அவரிடம் மாமல்லர் அதிக அன்பு வைத்திருக்கிறார் என்பதிலேதான் அதிருப்தி. எனவே, இப்போது மாமல்லர் அவனைப் பற்றி அலட்சியமாகப் பேசியதும், இவரே மானவன்மருடைய கட்சி பேச ஆரம்பித்தார்.

"ஆகையினால்தான் மானவன்மரைத் திருப்பி அனுப்புவது நியாயமல்லவென்று நான் சொல்கிறேன். யானைப் படைக்கு இப்பேர்ப்பட்ட புதிய

பயிற்சி அளித்து ஆயத்தப்படுத்தியவருக்கு, அந்த யானைப்படை யுத்தத்தில் தானும் கலந்து கொள்ள வேண்டுமென்று ஆசையா யிராதா?" என்றார் சேனாபதி பரஞ்சோதி.

இந்தச் சமயத்தில், அவர்கள் பேசிக் கொண்டிருந்த இடத்துக்குச் சற்று தூரத்தில் இருந்த பிரம்மாண்டமான அரச விருட்சத்தில் ஒரு பெரிய சலசலப்பு ஏற்பட்டது. அந்த மரத்தின் அடர்த்தியான கிளைகளில் இரவு நேரத்தைக் கழிப்பதற்கென்று அடைக்கலம் புகுந்திருந்த ஆயிரக்கணக்கான பறவைகள் சடசடவென்று இறகுகளை அடித்துக் கொண்டும் பற்பல சுருதி—ஸ்வரங்களில் கூச்சலிட்டுக் கொண்டும் மரத்திலிருந்து வெளிவந்து வட்டமிட்டு மறுபடியும் கிளைகளுக்குள் புகுந்து ஆரவாரம் செய்தன.

"அந்த மரத்துக்குத் திடீரென்று என்ன வந்து விட்டது? மர மேறக் கூடிய காட்டு மிருகம் ஏதாவது அதில் ஏறி விட்டதா? பறவைகள் இப்படி அலறுகின்றனவே?" என்று மாமல்லர் கேட்டதற்கு, அந்தத் திசையை உற்றுப் பார்த்துக் கொண்டிருந்த சத்ருக்னன், "பிரபு! காட்டு மிருகம் எதுவும் அந்த மரத்தில் ஏறவில்லை. வீட்டு மிருகம்—இரண்டு கால் மிருகம் ஒன்று அந்த மரத்திலிருந்து இறங்கிக் கொண்டிருக்கிறது!" என்றான்.

உடனே அவன் கையை ஓங்கித் தட்ட, சற்றுத் தூரத்தில் ஆயுத பாணிகளாகக் காவல் புரிந்த வீரர்களில் ஒருவன் விரைந்து ஓடி வந்தான்.

"அதோ பார்! அந்த அரச மரத்திலிருந்து யாரோ ஒருவன் கீழே இறங்கிக் கொண்டிருக்கிறான். அவனைப் பிடித்துக் கொண்டு வாருங்கள்!" என்று சத்ருக்னன் கட்டளையிட்டான்.

அவ்விதமே மேற்படி வீரர்கள் விரைந்து அரச மரத்தை நோக்கிச் சென்று, அதிலிருந்து கீழே இறங்கியவனைக் கைப் பிடியாய்ப் பிடித்துக் கொண்டு வந்தார்கள்.

வீரர் தலைவன், "பிரபு! இதோ வாதாபி ஒற்றன்!" என்று கூறித் தலைவணங்கினான்.

மாமல்லரும் பரஞ்சோதியும் கலீரென்று சிரித்தார்கள்.

ஏனெனில், அந்த வீரர்களால் கொண்டுவரப்பட்டவன் வேறு யாருமில்லை. நமது பழைய சிநேகிதன் குண்டோதரன் தான்.

சத்ருக்னன் சமிக்ஞை செய்ததின் பேரில் அந்த வீரர்கள் குண்டோதரனை விட்டு விட்டுத் திரும்பித் தங்கள் இடத்துக்குச் சென்றார்கள்.

"குண்டோதரா! இது என்ன? எதற்காக நீ வாதாபி ஒற்றன் என்று சொல்லிக் கொண்டாய்?" என்று சேனாபதி பரஞ்சோதி கேட்டார்.

"ஆம், சேனாபதி! நான் சொன்னது உண்மைதானே? 'வாதாபி ஒற்றன்' என்றால், 'வாதாபிக்குப் போய் வந்த ஒற்றன்' என்ற அர்த்தத்தில் சொன்னேன். உடனே அந்த வீரர்கள் என்னை ஒரே பிடியாய்ப் பிடித்து இழுத்துக் கொண்டு வந்து விட்டார்கள். அப்பா! அவர்கள் பிடித்த இடங்களில் இன்னும் வலிக்கிறது!" என்றான்.

"ஆமாம்; ஆனால் அந்த மரத்தின் மேலேறி என்ன செய்து கொண்டிருந்தாய்? எத்தனை நேரமாய் அங்கு உட்கார்ந்திருக்கிறாய்?" என்று சக்கரவர்த்தி கேட்டார்.

"பிரபு! நேற்றிரவே இங்கு வந்து விட்டேன். காலையில் எழுந்து பார்த்தால், நமது சைன்யம் வந்து கொண்டிருந்தது. உடனே மரத்தின் மேல் ஏறியவன்தான், இத்தனை நேரமும் நமது சைன்யத்தின் கணக்கு எண்ணிக் கொண்டும், வாதாபி புலிகேசியை ஜயிப்பதற்கு இந்தச் சைன்யம் போதுமா என்று யோசித்துக் கொண்டும் இருந்தேன்."

"என்ன முடிவு செய்தாய்? சைன்யம் போதுமா?" என்று சக்கரவர்த்தி கேட்டார்.

"சுவாமி! அதைப் பற்றி எனக்குச் சந்தேகமே இல்லை. ஆனால் வாதாபிக்கு நாம் போய்ச் சேர்வதற்குள்ளே, அஜந்தா குகைக்குப் போயிருக்கும் புலிகேசி சக்கரவர்த்தி வாதாபிக்குத் திரும்பி வரவேண்டுமே, அவர் வெளியிலே தங்கிவிட்டால் என்ன செய்கிறது என்றுதான் கவலைப் படுகிறேன்!" என்றான் குண்டோதரன்.

---

சென்ற இதழில் வெளியான காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: எம். அப்துல் வகாப், C/o மதினா ஸ்டோர்ஸ், உசிலம்பட்டி, மதுரை ஜில்லா.



# கான சஞ்சாரம்

இசைத்தேனீ

12௳. சென்னை நிலையத்தில் இரவு ஒரு மணி நேரம் பாடிய சிந்தலப் பள்ளி ராமச் சந்திர ராவின் சாரீரம் கனிப்பாய்க் கேட்டது. ஆங்காங்கே சற்று நயமும் கொடுக்கப் பயிற்சி செய்து கொண்டால் அவர் சங்கீதம் இன்னும் மேம்படும். நல்ல ஞானமும் சிறந்த சாதகமும் கொண்டவராகத்தான் தோன்றியது. சங்கராபரணம் விரிவாயும் கற்பனையுடன் பாவம் நிறைந்ததாயு மிருந்தது. தோடி அடுத்தபடி. 'சிவநனு' என்ற சந்திர ஜ்யோதி கிருதி நன்றாயிருந்தன.

13௳. திருச்சியில் வயலின் கச்சேரி செய்த வராகூர் முத்துஸ்வாமி அய்யர் அந்த வாத்தியத்தில் கைதேர்ந்தவர். எடுத்துக் கொண்ட உருப்படிகள் ஆறும் பாபநாசம் சிவன் சாஹித்தியங்கள். எல்லாவற்றிற்கும் அவைகளின் ராகங்களையும் ஸ்வரப்ரஸ்தாரங்களையும் நிதானமாயும் அழகாயும் வாசித்தார்.

14௳. திருச்சியில் மருங்காபுரி கோபால கிருஷ்ணய்யர் மற்றொரு முதல்தர வயலின் கச்சேரி செய்தார். அவர் வாசிப்பு இக்காலத்திய நவீன நாஸாக்குகள் இல்லாத சம்பிரதாய முறை. காம்போதி ராகம் தானம் பல்லவிகள் விரிவாயும், அழுத்தமாயும் சுகமாயு மிருந்தன. ஆனந்த பைரவி ஆனந்தமாகவே விளங்கியது.

16௳. சென்னையில் டி. கே. பட்டம்மாளின் கச்சேரி வளப்பமாய் வாய்த்தது. கேதார கௌளை, சுத்த தன்யாசி ராகங்களும் 'அந்தராம சௌந்தரியம்' உருப்படியும் கவர்ச்சி கொடுக்கும் அழகுவாய்த்திருந்தன. 'எப்படிப் பாடினரோ' உருப்படியின் ராகத்தை (பண்டைக்கால சங்கீத ரத்னாகர ஏட்டைத் திருப்பி) 'கர்னாடக தேவகாந்தாரி' என்று முன்னும் தெரியப்படுத்தியது நல்லதாய்ப் போயிற்று. இல்லாவிடில் கலப்புள்ள ஆபேரி என்றே கேட்டவர்கள் எண்ணியிருப்பார்கள்.

17௳. சென்னையில் முத்தைய பாகவதரின் சிறந்த சிஷ்யரான கே. எ. ஸ்ரீனிவாஸனின் கச்சேரியும், திருச்சியில் மாயவரம் ராஜமய்யரதும் முதல் தரத்தைச் சேர்ந்தவை. முன்னவருக்குக் கனிப்பான சாரீரம். கம்பீரமான வழி. ராகங்கள், கிருதிகள், நிரவல் ஸ்வரங்கள் எல்லா வற்றையும் அலட்சியமாயும் பிகுவாயும் வாரியளித்தார்.

பின்னவர் பழைய ராஜமய்யரல்ல. அவரது உத்ஸாகத்துக்கும் பிர்க்காவுக்கும் குறைவில்லை யாயினும் வழியைப் பண்படுத்தி எல்லாவற்றையும் நிதானமாகப் பாடினர். ரீதிகௌளை, ஸஹானா, ரஞ்சனி ராகங்கள் கீர்த்தியா யிருந்தன.

18௳. திருச்சியில் முழுநேரம் நடந்த சீனியர் வித்வான் திருப்பாம்பரம் ஸ்வாமிநாத பிள்ளையின் வேணுகானக் கச்சேரியில் அவர் ஆபோகியோடு, ஸாரஸாங்கி, ஆந்தோளிகா, வினாவளி, வேளாவளி என்ற அபூர்வ ராகங்களை நிறம்படக் கையாண்டார்.

13௳. சென்னையில் வி. என். ராஜலட்சுமி இனிய குரலில் பிலஹரி, ஆரபி ராகங்களையும் 'உண்டென்று' உருப்படி, நிரவல் ஸ்வரங்களையும் மனோஹரமாய் வழங்கினர்.

16௳. சென்னையில் பாடிய எண்ணப்பாடம் ராமச்சந்திரன் நயசாரீரமும் நல்ல உதவுபடியும் கொண்டு முன்னணிக்கு வரும் யோக்கியதையுள்ள இளம் பாடகர். காமவர்த்தனி, கரஹரப்ரியா ராகங்களும், 'வாடேரா' கிருதியில் விழுந்த விருவிருப்பான நிரவல் ஸ்வரங்களும் குறிப்பிடத் தக்கவை.

18௳. சென்னையில் அனந்தலக்ஷ்மி நாகராஜன் கனிப்பான குரலில் ஞானபாவமும் நல்வழியும் கொண்டு கேதாரகௌளை, ஜங்காரத்வனி ராகங்களையும் கோடீச்வரய்யரின் கிருதிகளையும் வழங்கினர்.

சென்ற வாரத்தில் சென்னை திருச்சி நிலையங்கள் இரண்டிலும் பல முதல்தரக் கச்சேரிகள் அமைந்தது விசேஷம்.

25௳. இரவு திருச்சியில் நடந்த தஞ்சை லக்ஷ்மிநாராயண பாகவதரின் கச்சேரி வழக்கம்போல் பல அழகு பொருத்தங்களுடன் நன்றாய் வாய்த்தது. கல்யாணி நிதானமாயும் பாவப் பொழிவுடனும் இலங்கியது. விஸ்தாரமாய் வழங்கிய தோடியும் அதில் 'குன்றக்குடி' என்ற உருப்படியும் வசீகரமா யிருந்தன.

24௳. பிற்பகலில் சென்னையில் எஸ். வி. பார்த்தஸாரதி தனக்கு இயல்பான கலகலத்த சாரீரத்துடனும் விருவிருப்பான வழியுடனும் சக்கைப்போடு போட்டார். ஹரிகாம்போதி.



"சபையோர்களே! இந்த நாடகத்தில் பிசாசு வேஷம் போட்டுக் கொண்டவர் தாமே தம்மைக் கண்ணாடியில் பார்த்து விட்டு மூர்ச்சையாகி விட்டார். ஆகையால் அடுத்த காட்சி சற்றுத் தாமதப்படும்."

தோடி, காமவர்த்தனி ராகங்களும் அவைகளின் இறுதி, நிரவல் ஸ்வரங்களும் ஜோராக இருந்தன. பிர்க்காப் பொழிவுடன் ஆங்காங்கே நிதானமும் கொண்டு மொத்தத்தில் ஸங்கீதம் பிரதமமாயிருந்தது.

அன்றிரவு திருச்சியில் நடந்த தஞ்சாவூர் எம். தியாகராஜன் பாட்டைக் கேட்டவர்கள் அவர் கலையில் நாளுக்குநாள் ஏறிவரும் மெருகையும் நாஸூக்கு மிருதுவையும் கவனித் திருப்பார்கள். கல்யாணி அழகு சஞ்சாரங்களுடன் வெகு நாஸூக்காயும் பாணியாயும் வெளிவந்தது. பந்துவராளி, பௌளி ராகங்களை அடுத்த படியாய்ச் சொல்லலாம்.

21ல. சென்னையில் ருக்மிணி ராஜகோபாலனின் கானம் வெகு சிறப்பா யிருந்தது. ஸாவேரி, விஸ்தாரமாயும் நிதானமாயும், படிப்படியான கோவை சஞ்சாரங்களுடனும் அழகு வடிவமாய் மனம் கவர்ந்தது. 'உபசாரமு' இறுதியில் 'கபட நாடக' என்ற இடத்தில் விழுந்த சங்கதிகள் நிரவல்கள், ஸ்வரங்கள் இவைகளின் வனப்பு அசாதாரணமா யிருந்தது. எதையும் தெவிட்டாத வனப்புடன் பாடி அழகு படுத்தும் இத்தகைய கலைவாணிக்கு அரை மணி யென்று நேரத்தைக் குறுக்காது முழு நேரக் கச்சேரி யமைப்பதே உசிதம்.

19ல. இரவு சென்னையிலிருந்து கேட்ட விஞ்ச முனி வரதராஜய்யங்காரின் கச்சேரியும் முதல் ரக வகுப்பில் ஒன்று. உருப்படி நிறைந்த நயசாரமும் நல்வழியும் கொண்ட இவ்விளம் பாடகர் பிரபல்ய மடைவதற் குரியவர்.

அன்று சென்னையில் பிரபல வித்வான் முசிரி சுப்ரமணிய அய்யர் 'கற்பனை சங்கீதம்' என்பதைப் பற்றிச் சொற்பொழிவாற்றினார். ச கீத உலகத்தைப் பற்றிய பல நாள் களைத் துணுக்குகளும், சங்கீதத்துக்கு கற்பனை என்றால் என்ன, எப்படிச் சித்தி பது, எது உண்மையானது, எது போலி என் விவரங்களை முசிரி விளக்கவில்லை. ரா லக்ஷணம் தவறாது பாடிவிட்டால் மாத்திர கற்பனையாய் விடாது. ராகங்கள், இறுதிக எல்லாவற்றிலும் பாவமற்ற வறட்டு பிர்க்கா களைச் சாமர்த்தியமாய்க் கொட்டி, மேடைமே அதிக அங்க சேஷ்டைகளுடன் ஜன்ம வரிசை சாதகம் செய்வதைக் கற்பனை என் சொல்ல முடியாது. உயரிய லக்ஷணப் பொரு தங்களும், உண்மையான அழகு கற்பனையு உள்ள சங்கீதமானால் அது ஞானஸ்தர்களை யும் பாமரரையும் ரஸிக்க வைக்கும் வசீ கலையாகும்.

• • •

19ல. திருச்சியில் கேட்ட திருக்கோவிலூரன். அலமேலுவின் கானம் மதுரமும், பாவ பொழிவும் கொண்டது. கல்யாணி, பந் வராளி, ஆலாபனைகள் வனப்பா யிருந்தன உருப்படிகளின் சங்கதி, நிரவல், ஸ்வர களில் நாஸூக்கு மிகுந்திருந்தது.

20ல. சென்னையில் பரூர் சுந்தரமய்ய வயலின் கச்சேரி செய்தார். அவரது ஞான மும், சாதக முறையும் சங்கீத உலகம் நன் அறிந்ததே. அன்னவன்னர் 'ஜய ஜ வந்தி' என்று விளம்பரம் செய்த விஜயவந் என்ற அபூர்வ ராகத்தைக் கையாண்ட போற்றத்தக்கது. ஆனால் ஒரிக்கை சாதக தையே லக்ஷ்யமாய் மிகைப்பட வைத்து கொள்ளாது ரஞ்சகத்தையும் அவர் கவனி துக் கொள்வது நலம்.

# சலங்கைத் திருடி

'லல்லு'

அன்று நான் செய்த காரியத்தை இன்று நினைக்கவும் எனக்கு வெட்கமாயிருக்கிறது. சிவப்புப் பட்டுக் கயிற்றில் அழகிய சிறு வெண்கல மணிகள் கோர்த்த சலங்கைகள் இரண்டைக் கண்டேன். விவரிக்க முடியாததொரு உணர்ச்சியால் தூண்டப்பட்டு, அவைகளில் ஒன்றை என்னுடையதாக்கிக் கொண்டேன். போயும் போயும் ஒரு சலங்கையைத்தானா திருட வேண்டும் என்கிறீர்களா?—கேளுங்கள், கதையை:

* * *

என் தாயாருக்கு எட்டு வயதிலேயே கல்யாணம். சம்பந்தி எப்பேர்ப்பட்டவர்கள் என்று உண்மையைத் தெரிந்து கொள்ளாமல் அவசரப்பட்டுத் தாலியைக் கட்டி விட்டார்கள். என் தாயார் நல்ல அழகு வாய்ந்தவள்; யாரேனும் பாடக் கேட்டால் தானும் இனிமையான குரலில் அதேபோல் பாடுவாள். கணவர் வேலை எதுவுமில்லாமல் வீட்டிலேயே உட்கார்ந்திருப்பார். குரூபி; முன்கோபி. தாயாரும் தமக்கையும் வெளியிடும் கோள் சொற்களை நம்பி, நன்று அறியாத மனைவியை நையப்புடைப்பார். சில நாட்களில் என் தாயாருடைய உடம்பில் போட்டிருந்த நகைகள், சீர் வந்த பாத்திரங்கள் எல்லாவற்றையும் விற்றுச் சாப்பிட்டான பிறகு, அவளைப் பிறந்தகத்திற்கு அனுப்பி, இருநூறோ, மூந்நூறோ நாண்டிக்கொண்டு வரச்சொல்லுவார்கள். எதிர்பார்த்தபடி பணம் அகப்படா விட்டால் அடி, உதை இவைகள் சன்மானம். இப்படி அநேக தடவைகள் அவர்களைத் திருப்தி செய்து செய்து என் பாட்டிக்கு அவள் புருஷன் வைத்துப்போன சொத்தும் கரைந்து விட்டது.

இப்படியே காலைந்து வருஷங்கள் சென்றன. எனக்கு ஐந்து வயது நடந்து கொண்டிருந்தது. அப்பொழுது ஒரு முக்கியமான சம்பவம் நடந்தது. அது எங்கள் வாழ்க்கையின் போக்கையே அதிர்ஷ்டவசமாக மாற்றி விட்டது. எனக்கு முறு கெல்லாம் 'அக்கி' வந்திருந்தது. ஒரு நாள் என் தகப்பனார் ஊர் சுற்றிவிட்டு இரவு பத்து மணிக்கு வந்து கதவை இடித்தார். என் தாயார் நாள் முழுதும் மாடாக உழைத்து விட்டுத் தன்னையும் மீறிக் கண்ணயர்ந்து விட்டாள். நான் உடம்பு வேதனையால் விழித்துக் கொண்டிருந்தேன். அம்மா தூங்குவதைப் பார்த்து அப்பா கோபித்து அடிப்பாரோ என்று பயத்தால் மெள்ளக் கதவருகில் போய், எனக்கு எவ்வளவு தைரியமுண்டோ, அவ்வளவு தைரியத்தையும் வரவழைத்துக் கொண்டு "கதவைத் திறக்க மாட்டேன், போ!" என்றேன்.

கதவை இன்னும் பலமாக இடிக்கவும், என் தாயார் விழித்துக் கொண்டு ஓட்டமாக ஓடி வந்து கதவைத் திறந்தாள். ஏதோ புயல் அடித்துக் கொண்டு வருவதுபோலிருந்தது எனக்கு. பிறகு என் முதுகுப் புண்ணின் மேல் பெய்வதுபோல் அடிமேல் அடி விழுந்தது. வலி பொறுக்காமல் 'ஓ'வென்று கதறினேன். என் தாயார் இதைக் கண்டு சகிக்காமல் என்னைத் தன் பக்கம் இழுத்துக் கொள்ளவே என் தகப்பனாரின் கோபம் அம்மாவின்மேல் பாய்ந்தது. அம்மாவை நையப் புடைக்க ஆரம்பித்தார்.

என் தாயார் அப்பொழுது ஏழு மாதக் கர்ப்பிணி. பலமான அடி விழுந்து வலி தாங்காமல் மயங்கிக் கீழே விழுந்தாள். அதைப் பார்த்து நடுங்கிப் போய் நான் பலமாக அழுதுகொண்டு தெருவிற்கு ஓடினேன். அண்டை அயலில் உள்ளவர்கள் எங்கள் வீட்டு வாசலில் கூடி விட்டார்கள். அவர்களுள் வைத்தியநாதய்யர் என்று போலீஸ் உத்தியோகஸ்தர் ஒருவர். மிகவும் நல்ல குணம் வாய்ந்தவர். பரோபகாரி. அவர் முயற்சியால் என் தாயாரை ஆஸ்பத்திரிக்கு அனுப்பிச் சிகிச்சை செய்வித்ததில், என் தாயார் உயிர் தப்பினாள்.

வைத்தியநாதய்யரின் வற்புறுத்தலின் பேரில் என் தாயார், நான், பாட்டி, மாமா எல்லோரும் பட்டணம் வந்து சேர்ந்தோம்.

நாங்கள் இங்கு வந்து பதினைந்து வருஷமாகி விட்டது. என் தாயார், நம் இந்தியப் பெண்மணிகளின் முன்னேற்றத்திற்காகவே தன் வாழ் நாட்களைப் பயன் படுத்திய ஒரு ஸ்திரீ ரத்தினத்தின் ஆதரவால், படித்து 'ட்ரெயினிங்' முடித்துவிட்டு, சிறந்த வித்வான்களிடம் சங்கீத ஞானத்தையும் விருத்தி செய்து கொண்டு, பெண்கள் உயர்தரப் பாடசாலை யொன்றில் வேலைக்கு அமர்ந்தாள். என் மாமாவும் டெக்னிகல் காலேஜில் பயிற்சி பெற்று, சர்க்கார் உத்தியோகத்தில் இருநூறு ரூபாய் சம்பாதிக்கக் கூடியவரானார். எங்கள் வாழ்க்கைச் சக்கரமும் மேடு பள்ளங்களில் இடிபடாமல் சுலபமாகச் சுழல ஆரம்பித்தது.

## 2

அம்மாவோடு பள்ளிக்கூடத்தில் வேலை பார்க்கிறாள் குஞ்சம்மா. அவள் தம்பிக்குப் பம்பாயில் ஒரு கம்பெனியில் இருநூற்றைம்பது ரூபாய்ச் சம்பளத்தில் வேலையாம். நன்றாய்ப் படித்த பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்று ஆசையாம். அதற்கு நான் அகப்பட்டேன் குறி! ஒரு வார லீவில் இங்கு வந்திருந்த தம்பியை அழைத்துக் கொண்டு திடீரென்று என்னைப் பார்க்க வீட்டிற்கு வந்து விட்டார்கள். அவனும், அவன் தாயாரும் வராந்தாவில் தனிமையில் என்னிடம் வந்தனர். "உனக்கு 'டென்னிஸ்' ஆட வருமா?" "பரத நாட்டியம் பிடிக்குமா?" "சினிமா 'ஸ்டார்'களில் யார் யாரைப் பிடிக்கும்?" என்றெல்லாம் அசட்டுப் பிசட்டென்று கேள்வி கேட்க ஆரம்பித்து விட்டான் மாப்பிள்ளை! என் ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு ஏதோ மழுப்பி விட்டு, அவ்விடத்தை விட்டு அகன்று என் அறைக்குச் சென்று கதவைத் தாளிட்டுக் கொண்டேன். அவர்கள் போன பிறகு அம்மா என்னிடம் வந்து, "நீ படித்துப் பிரயோஜனமென்னடி? வந்தவர்களிடம் மரியாதையாக நாலு வார்த்தை பேசத் தெரியலையே! பிள்ளையைப் பிடிக்காவிட்டால் அப்புறம் நாளுக்காச் சொல்லி விட்டால் போகிறது!" என்றாள்.

"எனக்குத்தான் கல்யாணம் பண்ணிக்க இஷ்டமில்லையென்று நூறு தரம் சொல்லியிருக்கேனே? நீ பண்ணிக்கொண்டு கஷ்டப் பட்டது போதாதா? இனிமே இதுமாதிரி விவகாரத்துக்குப் போகாதே!" என்றேன்.

"என் ஜாதக விசேஷம் எனக்கு அது மாதிரி வாய்த்தது. நல்ல வரன் கிடைத்தால் கல்யாணம் பண்ணிக்காம இருப்பானேன்? உனக்கு அழகிலேயா, படிப்பிலேயா எதிலும் குறைச்சலில்லை. பெரியவா சொல்றதையும் கொஞ்சம் கேளேன்!" என்றாள் அம்மா.

"சரி, சரி. பொழுது விடிந்தால் உனக்கு இந்த ராமாயணம்தான்! கல்யாணப் பேச்சையே இனிமேல் எடுக்காதே!" என்று நான் கோபித்துக் கொண்டேன். அம்மா பதில் பேசாமல் அங்கேயிருந்து போய் விட்டாள்.

பாவம், அம்மாவின் மனத்தை நோகப் பண்ணி விட்டேனே என்று சற்றுக் கலங்கினேன். நாம் செய்வது சரியா, தப்பா என்று யோசித்ததில், நியாயம் என் பக்கம் தான் என்று மனது சாதித்தது.

வகுப்பில் எனக்கு உயிர்த் தோழி ஞானம். செல்வமுள்ள குடும்பத்தில் பிறந்தவள். படிப்பை அவ்வளவோடு நிறுத்திக் கொண்டு கல்யாணம் செய்விக்க உத்தேசித்திருந்தார் அவள் தகப்பனார். அவளுக்கு ஒரு தமையன் உண்டென்றும், பி. ஏ. பாஸ் பண்ணி விட்டு ஆர்ட்ஸ் காலேஜில் சிற்பம் பயிலுகிறான் என்றும் ஏதோ ஒரு சமயம் சொல்லக் கேள்வி.

பரீட்சை முடிந்ததும், ஞானம் தன்னுடைய தகப்பனாருடன் சேலத்திற்குப் புறப்பட்டுப் போய்விட்டாள். நான் மேலே படிக்க வேண்டியதற்கு ஏற்பாடுகளைச் செய்து கொண்டு விடுமுறையின்போதும் இங்கேயே இருந்தேன்.

எங்கள் எதிர் வீட்டுக் குழந்தை ராமு மூன்றே வயது. வீட்டிலிருக்கும்போதெல்லாம் என் காலைச் சுற்றிக்கொண்டிருப்பான், அவனுக்குத் திடீரென்று ஒரு நாள் ஜுரம் வந்து விட்டது. அவசரக் காரியமாக அவனுடைய தகப்பனார் வெளியூர் போய் விட்டதால், நானே அவனை டாக்டர் வீட்டுக்கு எடுத்துக் கொண்டு போனேன். திரும்பும் பொழுது டிராமில் ஏகக் கூட்டம். அழுது அழுது அயர்ந்து போய்த் தூங்கிக் கொண்டிருந்த குழந்தையைத் தோளில் சாய்த்துக் கொண்டு, மேலே தொங்கும் இரும்பு வளையத்தைப் பிடித்துக் கொண்டு நிற்க முடியாமல் கஷ்டப்படுவதைப் பார்த்து என் அருகில் நின்று கொண்டிருந்த ஒருவர் குழந்தையைத் தம்மிடம் கொடுக்கும்படி கேட்டார். அவர் உண்மையாகவே நான் கஷ்டப்படுவதைக் கண்டு இரக்கப்படுவதைப்போல் தோன்றினதால் அவ்வாறே

செய்தேன். நம் இந்திய முறைப்படி வேஷ்டி, நீண்டகை வைத்து முழங்கால்வரை தொங்கும் வெள்ளைக் கதர்ச் சட்டை, அங்கவஸ்திரம் இவைகள் தரித்திருந்தார். அழகிய சுருண்ட மயிர் மொட்டையாகக் கிராப் செய்யப்படாமல் பின் கழுத்துவரை நீண்டு வளர்ந்திருந்தது. நல்ல களை பொருந்திய முகம். எனக்குப் பரிச்சயமான ஏதோ ஒரு முகத்தின் சாயலாக இருந்தது.

மவுண்ட்ரோடு வந்ததும் உட்காருவதற்குக் கொஞ்சம் இடம் கிடைத்தது. குழந்தையைக் கொடுக்க என்னிடம் கைகளை நீட்டினார். நான் குழந்தையை வாங்கிக் கொள்ளும் பொழுது அவருடைய கை விரல்கள் என்னுடைய கைவிரல்களோடு ஒரு கணம் பொருந்தின. அதனால் ஏற்பட்ட இன்ப மயக்கத்தில் அவர் இறங்கிச் சென்ற பொழுது வந்தனம் செலுத்தவும் மறந்து போனேன்!

## 3

இரண்டு மாதத்துக்குப் பிறகு, அம்மாவின் பள்ளிக்கூடத்தில் ஏழை மாணவர்கள் உபகாரச் சம்பள நிதிக்காக ஒரு "கதம்ப நிகழ்ச்சி" நடத்தினார்கள். நானும் அந்த வைபவத்திற்குச் சென்றிருந்தேன். ஆடல் பாடலில் தேர்ந்த வெளி மனிதர்களையும் பள்ளிக் கூடத்துக் குழந்தைகளையும் கொண்டு நிகழ்ச்சியை நடத்தினார்கள். அம்மாவும் சில 'க்ரூப்' நடனங்கள் தயார் பண்ணியிருந்தாள். ஸ்ரீ வேணுகோபால் என்பவருடைய 'கண்ணப்ப நாயனார்' என்ற நிகழ்ச்சி எல்லோருடைய மனதையும் மிகவும் கவர்ந்தது. நாட்டிய



மாடும் பொழுது அவர் அங்க அசைவுகளும் முகபாவமும் பக்தி ரஸத்தைச் சொரிந்தன.

நிகழ்ச்சி முடிவில் என் தாயாரைத் தேடிக் கொண்டு 'ட்ரெஸ்ஸிங் ரூம்'முக்குச் சென்றேன். அங்கு கண்ணாடியின் முன் 'மேக் அப்'பைக் கலைத்துக் கொண்டிருந்தவரைச் சுட்டிக் காட்டி, "இவர்தான் ஸ்ரீ வேணு கோபால்; நாட்டியக் கலையின்மேல் உள்ள பற்றுதலால் பொழுது போக்காகக் கற்றுக் கொண்டவர்" என்று அம்மா அவரை எனக்கு அறிமுகப் படுத்தினாள். அவர் வந்தனம் செலுத்த என் பக்கம் முகத்தைத் திருப்பின பொழுது, ஆச்சரியத்துடன் அவரை விழித்துப் பார்த்தேன். அவரே அன்று நான் டிராம் வண்டியில் சந்தித்த இளைஞர்!

அவர் விடை பெற்றுச் செல்லும்போது அம்மா அவரை எங்கள் வீட்டிற்கு ஒரு நாள் வந்து போகும்படி சொல்லி விலாசத்தைக் கொடுத்தாள். அவரும் சரி யென்று ஒப்புக் கொண்டு சென்றார். அவர் என்னைப் பார்த்துச் சிரித்த சிரிப்பிலிருந்து அவரும் என்னை நினைவு வைத்துக் கொண்டிருப்பதாகத் தெரிந்தது.

சிதறிக் கிடந்த 'மேக் - அப்' சாமான்களை ஒவ்வொன்றாக எடுத்து வைத்தோம். அப்பொழுது அம்மா, "வேணுகோபால் சலங்கைகளைப் போட்டு விட்டுப் போய்விட்டாரே!" என்று சொல்லி, அதை எடுத்துப் பெட்டிக்குள் போட்டாள்.



பிச்சைக்காரன்:—சாமி, பசி காதை அடைக்குதுங்க!

டாக்டர்:—கம்பவுண்டர், இவனுக்குக் காதில் ஏதேனும் மருந்து போட்டு அனுப்பு!

வீடு வந்து சேர்ந்தோம். எனக்கு இரா தூக்கம் கொள்ளவில்லை. மனது ஓயாமல் அவரைப் பற்றியே சிந்தித்தது.

ஒரு நாள் வேணுகோபால் எங்கள் வீட்டுக்கு வந்திருந்தாராம். அன்றை தென்று நான் வீட்டிலில்லை. அம்மா சலங்கைகளை அவரிடம் கொடுக்கவா என்று அவைகளை எடுக்கப் போனாளாம் ஒன்றுதான் இருந்ததாம். "இன்னொன்றை பார்த்தாயா?" என்று என்னைக் கேட்டாள் "எனக்குத் தெரியாது!" என்று சொல்லி விட்டேன். மறுநாள் அம்மா, வேணு கோபாலனுக்குத் தங்கை ஒருத்தி இருக்கிற ளென்றும், அவளுடைய கல்யாணத்திற்கா என் மாமாவின் ஜாதகத்தை வாங்கி கொண்டு போனதாகவும் சொன்னாள்.

அவன் அப்படிச் சொன்ன சில நாட்களு கெல்லாம் என் மைத்துனி ஜானகியிட மிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது அந்தக் கடிதத்தில் அவள்தான் வேணு கோபாலனின் சாக்ஷாத் தங்கையென்றும் என் மாமாவின் ஜாதகமும் தன்னுடைய ஜாதகமும் ரொம்பப் பொருந்தி யிருப்ப தாகவும் கடிதம் எழுதி யிருந்தாள். நான் சற்றும் தாமதிக்காமல் கல்யாணத்தை உடனே நடத்திவிட என்னால் ஆனதை செய்தேன். கல்யாணமும் நடந்தது. ஜானகி எங்களுடைய வீட்டிற்கு வந்து விட்டாள் அவள் தன்னுடைய அண்ணனையே கல்யா ணம் பண்ணிக் கொள்ளச் சொல்லி என்னை வற்புறுத்தினாள். எனக்கு உள்ளூற ஆசை யிருந்தாலும், என் வார்த்தையைக் கா பாற்ற வேண்டி, வெளிப்படையாக கல் யாணமே செய்து கொள்ளப் போவதில்லை என்று பிடிவாதம் பிடித்தேன்.

கடைசியில், வேணுகோபாலனுக்கு வேறு இடத்தில் பெண் நிச்சயமாகும் போலிருந்தது. அவர் சேலத்திற்குப் புறப்பட்டு போய், பிறகு தகப்பனுடன் பெண்ணை பார்க்கப் போவதாக ஜானு சொன்னாள் ஊருக்குப் போகும் தினத்தில் தங்கையை பார்க்க வந்திருந்தார். என் பாட்டி, அம்மா மாமா, ஜானு, நான் எல்லோரும் எடுத்து கொண்ட க்ரூப் போட்டோவின் பிரதி ஒன்று அவருக்கு வேண்டுமென்றும், என்னிட மிருப்பதைக் கொடுக்கும்படியும் ஜானு கேட்டாள்.

பெட்டியில் படம் எங்கோ அடியில் சிக்கி கொண்டிருந்தது. அவசரத்தில் மேலே

திருந்த துணிகளை வேகமாக இழுத்துப் போட்டேன். 'கலீர்' என்ற சத்தம்கேட்டுத் திரும்பினேன். திருட்டுத்தனமாக நான் எடுத்து வைத்திருந்த சலங்கை கீழே கிடந்தது. வாசற்படியருகில் நின்று கொண்டிருந்த அவருக்குச் சலங்கையின் ஒலி அவசியம் கேட்டிருக்க வேண்டும். இருந்தும், அவர் திரும்பிப் பாராததால், சலங்கையைப் பெட்டிக்குள்ளே போட்டுவிட்டு, படத்தை எடுத்துக் கொண்டு, வெளியே வந்து விட்டேன்.

4

அன்று ஞாயிற்றுக்கிழமை. அவர் ஊருக்குப் போய் இரண்டு நாட்கள் ஆகி விட்டன. இன்று அவர் பெண்ணைப் போய்ப் பார்த்திருப்பார் என்று எண்ணிய படியே, மடியில் வைத்திருந்த புத்தகத்தில் கவனமில்லாமல் நாற்காலியில் சாய்ந்து கண்ணை மூடிக் கொண்டேன். கதவு திறந்தது. ஞானு காப்பி கொண்டு வந்திருப்பாள் என்று உட்கார்ந்தவாறே திரும்பாமல் கையை மாத்திரம் நீட்டினேன். 'கிலுங்' என்று கையில் ஏதோ கனமாக விழவே, சட்டென்று எழுந்து திரும்பினேன். என்ன ஆச்சரியம்! வேணுகோபால் அங்கு நிற்பதைக் கண்டு திகைத்தேன்.

அவர் முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டு, "ஒரே ஒரு சலங்கையை வைத்துக்கொண்டு என்ன பிரயோஜனம்? இந்தா, இதையும் நீயே வைத்துக் கொள்!" என்றார்.

அவரை உற்றுப் பார்த்தேன். அவர் என் மனோ நிலையை அறிந்ததாகவோ, என்னிடம் இரக்கம் கொண்டதாகவோ தெரியவில்லை. துக்கம் தொண்டையை அடைக்க, நாற்காலியில் முகத்தைப் பதித்துக் கொண்டு விக்கி விக்கி அழுதேன்.

அவர் இரண்டே எட்டில் என்னை நெருங்கி வந்தார். தோள்களைப் பிடித்துத் தூக்கி நிறுத்தி, "கல்வி! எனக்கு உன்னுடைய மனோ நிலை முன்னமேயே தெரிந்து விட்டது! அன்று சலங்கை கீழே விழுந்த சத்தம் கேட்டுத் திரும்பினேன். நீ அதை அவசரமாகப் பெட்டிக்குள் போடுவது தெரிந்தது. 'சரி, இனி வேறு பெண்ணைப் பார்க்கப் போக வேண்டிய அவசியமே இல்லை!' என்று தீர்மானித்து விட்டேன்!" என்றார்.

"சலங்கையைத் திருடியதற்குத் தண்டனை ஏதேனும் உண்டா?" என்றேன் நான்.

"கல்யாணமாகட்டும்; அந்தச் சலங்கைகளை உன்னுடைய கால்களிலேயே கட்டி உன்னை நாட்டியமாட வைக்கிறேன்!" என்று அன்பு ததும்பக் கூறினார் அவர்.

★ ★ ★



இதோ!
உங்களுடைய
சோப்பு

காந்தி




ஸ்வஸ்திக் ஆயில்
மில்ஸ், லிமிடெட், பம்பாய் 15.

N.A.S. 150/3

செல்ஸ் டிப்போ: 158 B, பிராட்வே, மதராஸ்.

# எவன் தேற்றப்... ...போகிறான்?

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்



மணியம்.

திருதராஷ்டிரனைப் பார்த்துச் சஞ்சயன் சொன்னான்: "துக்கத்தை அடைந்தவனுக்கு மற்றவர்கள் சமாதானம் சொல்லித் துக்கத்தைத் தீர்க்க முடியாது. அநேக அரசர்கள் உம்முடைய புத்திரனுக்காக உயிர் இழந்தார்கள். அவர்களுக்கும் இன்னும் மாண்டு போன மற்றவர்களுக்கும் கிரமமாகப் பிரேத காரியங்களைச் செய்விப்பீராக!"

விதுரனும் திருதராஷ்டிரனுடைய சோகத்தைப் போக்க முயற்சி செய்தான். 'யுத்தத்தில் கொல்லப்பட்டவர்களைப் பற்றித் துக்கித்தல் தகாது. ஆத்மாக்களுக்குள் அண்ணன், தம்பி, பந்துக்கள் என்கிற பரஸ்பர சம்பந்தம் ஒன்றுமில்லை. உம்முடைய மக்கள் உமக்கு உண்மையில் சம்பந்தப்பட்டவர்கள் அல்லர். தேக சம்பந்தம் மரணத்தோடு முடிந்து போகிறது. கண்ணுக்குத் தெரியாத இடத்திலிருந்து வந்து மறுபடியும் கண்ணுக்குத் தெரியாத நிலையை ஜீவன்கள் அடைகிறார்கள். அதற்கு ஏன் புலம்ப வேண்டும்? யுத்தத்தில் எதிர்த்து நின்று உயிர் துறந்த வீரர்கள் இந்திரனுக்கு அதிதிகளா யிருப்பார்கள். கழிந்து போனதைப் பற்றித் துக்கிப்பதனால் தருமமோ, இன்பமோ, பொருளோ ஒன்றும் உமக்கு உண்டாக மாட்டாது"—இவ்வாறாகவும் இன்னும் பலவாறாகவும் தத்துவங்களை எடுத்துக் காட்டினான்.

வியாசரும் திருதராஷ்டிரனை அன்போடு உபசரித்து "அருமைப் புதல்வா! உனக்குத் தெரியாமலிருந்து நான் சொல்லி நீ தெரிந்துகொள்ள வேண்டியது ஒன்றும் இல்லை. பிராணிகள் அநித்தியம் என்பதை நன்றாக அறிந்திருக்கிறாய். இந்த யுத்தம் பூபாரத்தைக் குறைக்கவே நேரிட்டது. பிரபுவான விஷ்ணு இதைப் பற்றிச் சொல்லியதை நான் நேரில் கேட்டிருக்கிறேன். ஆனபடியால்தான் இந்த யுத்தத்தைத் தவிர்க்க முடியவில்லை. இனி யுதிஷ்டிரனே உன் மகன். அவன் பால் அன்பை உண்டாக்கிக்கொண்டு நீ உயிர் தரித்திருக்க வேண்டும். சோகத்தை விடு" என்றார்.

பிறகு யுதிஷ்டிரன் வந்தான். புலம்பிக் கொண்டிருந்த ஸ்திரிகளைத் தாண்டி அவன் திருதராஷ்டிரனை அடைந்து வணங்கி நின்றான். சோகத்தினால் பீடிக்கப்பட்ட திருதராஷ்டிரன் யுதிஷ்டிரனைக் கட்டித் தழுவிக் கொண்டான். ஆனால் அந்த ஆலிங்கனத்தில் பிரீதி இருக்கவில்லை.

பிறகு பீமசேனனையும் "வா!" என்று திருதராஷ்டிரன் அழைத்தபோது வாசுதேவன் முன்யோசனையுடன் பீமனை விலக்கிவிட்டு இரும்பால் செய்யப்பட்ட பிரதிமை ஒன்றைக் கண்ணில்லாத திருதராஷ்டிரனிடம் நிறுத்தினான். திருதராஷ்டிரனுடைய கோபத்தை அறிந்து கண்ணன் இவ்வாறு செய்தான். கிழவன் இரும்பு மயமான அந்தப் பிரதிமையைப் பீமசேனன் என்று எண்ணி இரு கைகளாலும் தழுவிக் கொண்டான். ஆலிங்கனம் செய்யும்போது தன் மக்களைக் கொன்றவன் என்று தாங்க முடியாத கோபம் மேலிட்டுத் தன்னையும் அறியாமல் பிரதிமையைப் பலமாகக் கட்டி அணைத்து நொறுக்கிவிட்டான்.

"ஹா! என் கோபம் என்னை ஏமாற்றி விட்டது. பீமன் இறந்தானே!" என்று திருதராஷ்டிரன் புலம்பினான்.

அப்போது கிருஷ்ணன் குருடனான அரசனைப் பார்த்து, "பிரபுவே! உமது கோபாவேசம் இவ்வாறு செய்யும் என்று அறிந்து நான் அதைத் தவிர்த்தேன். நீர் நொறுக்கிப் பொடியாக்கினது பீமசேனன் அல்ல; இரும்புப் பிரதிமை. உம்முடைய கோபத்தின் வேகம் பிரதிமையின்பேரில்

காட்டியதோடு தீர்ந்து போகட்டும். பீமன் உயிருடன் இருக்கிறான்" என்றான்.

கோபவேகம் அடங்கி பீமன் முதலான பாண்டவர்களையெல்லாம் கிழ அரசன் ஆசீர்வதித்தான். அவனிடம் அனுமதி பெற்றுக் கொண்டு அனைவரும் காந்தாரியிடம் சென்றார்கள்.

* * *

காந்தாரியிடம் வியாசர் இருந்தார். "அம்மணி! பாண்டவர்களிடத்தில் கோபம் பாராட்ட வேண்டாம். யுத்தத்துக்கு முன் நீயே சொன்னாயல்லவா? 'எங்கே தருமமோ அங்கே ஜயம்' என்றாய். அவ்விதமே முடிந்தது. நடந்து போன விஷயத்தில் மனத்தைச் செலுத்திக் கோபம் கொள்ளலாகாது. உனக்கு இயற்கையான பொறுமையை இப்போது பயன் படுத்திக் கொள்வாயாக!" என்றார்.

"பகவானே! நான் பாண்டவர்களைக் கண்டு அசூயைப் படவில்லை. புத்திர சோகத்தினால் என் புத்தியானது நிலை தவறியிருப்பதை ஒப்புக் கொள்ளுகிறேன். இந்தப் பாண்டவர்களும் எனக்கு மக்கள் ஆவார்கள். துச்சாதனனும் சகுனியுமே இந்தக் குலநாசத்துக்குக் காரணம் என்பதை அறிவேன். அருச்சுனனும் பீமனும் குற்றமற்றவர்கள். அகங்காரத்தினால் யுத்தம் நேரிட்டது. என் மக்கள் கொல்லப்பட்டது சரியே. அந்த விஷயத்தில் நான் ஒன்றும் குறை கூற மாட்டேன். ஆனால் வாசுதேவன் பார்த்துக் கொண்டிருக்கும் போது பீமன் துரியோதனனைச் சண்டைக்கு அழைத்து யுத்தம் நடந்தது. தன்னைவிடத் துரியோதனன் மல் யுத்தத்தில் சாமர்த்தியம் மிஞ்சியவன் என்று அறிந்து அவனை நாபிக்குக் கீழே அடித்துக் கொன்று விட்டான். அதுதான் என்னால் பொறுக்க முடியவில்லை" என்றாள்.

இதைக் கேட்ட பீமன், "அம்மா! யுத்தத்தில் என்னைக் காத்துக் கொள்ளுவதற்காக நான் அவ்விதம் செய்தேன். தருமமோ அதருமமோ, அதை நீ பொறுத்துக் கொள்ள வேண்டும். உன்னுடைய புத்திரன் யுத்தத்தினால் ஒருவனாலும் ஜயிக்க முடியாதவன். அதனால் அநியாயமான காரியத்தைச் செய்தேன். ஆனால் அவன் யுதிஷ்டிரரைச் சூதாட்டத்துக்கு அழைத்து வஞ்சித்தான். நாங்கள் அனைவரும் பலவாறு வஞ்சிக்கப்பட்டோம். அக்கிரமமாகக் கவர்ந்து கொண்டு ராஜ்யத்தை விடமாட்டேன் என்றான். பதிவிரதையான திரௌபதியை உன்னுடைய மகன் எவ்வாறு நடத்தினான் என்பது உனக்கு முற்றிலும் தெரிந்த விஷயம். கெட்ட நடத்தையை அநுசரித்த உன்னுடைய குமாரனை அந்தச் சபையிலேயே நாங்கள் கொன்றிருந்தால் நீ தவறு என்று அப்போது சொல்லியிருக்க மாட்டாய். தருமராஜனுடைய பிரதிக்ஞையால் கட்டுப்பட்டுச் சும்மா நின்றோம். யுத்தத்தில் பகையைத் தீர்த்துக் கொண்டோம். அம்மா! நீ விசனப்படாதே!" என்றான்.

"அப்பனே! நீ என் நூறு மக்களில் ஒருவனையாவது விட்டு மற்றவர்களையெல்லாம் கொன்று கோபம் தீர்த்துக் கொண்டிருந்தாயாகில் முதியவர்களாகிய எங்கள் இருவருக்கும் ஒரு ஊன்றுகோலாவது இருந்திருக்கும். தருமபுத்திரன் எங்கே? அவனைக் கூப்பிடுங்கள்" என்றாள்.

இதைக் கேட்டதும் யுதிஷ்டிரன் நடுக்கமுற்றுக் கை கூப்பிக்கொண்டு கண்களை வஸ்திரத்தினால் கட்டிக்கொண்டிருந்த காந்தாரியிடம் வந்து வணங்கி, "தேவி! உன் புத்திரர்களைக் கொன்றவனும் கொடியவனுமான யுதிஷ்டிரன் இதோ உன் முன் நிற்கிறான். சாபத்துக்குத் தகுந்தவன். சபிப்பாயாக! நான் துரோகம் செய்தவன். எனக்கு உயிரிலாவது ராஜ்யத்திலாவது இனிப் பயனில்லை" என்று கூறிக் காந்தாரியின் காலில் விழுந்தான்.

காந்தாரி பெருமூச்சு விட்டு ஒன்றும் சொல்லாமலிருந்தாள். யுதிஷ்டிரன் பேரில் தன் பார்வை விழுந்தால் அவன் எரிந்து போவான் என்று அறிந்து அவனைப் பார்க்காமல் வேறு பக்கம் முகத்தைத் திருப்பிக் கொண்டாள். ஆயினும் கண்களை மறைத்துக் கட்டிக் கொண்டிருந்த வஸ்திரத்தின் இடைவெளியின் வழியாக யுதிஷ்டிரன் கால் விரல்களை மட்டும் பார்த்தாள். அவை உடனே விகாரப்பட்டுப் போயின என்கிறார் பௌராணிகர்.

அருச்சுனன், காந்தாரியினுடைய சோகத்தின் வேகத்துக்குப் பயந்து வாசுதேவருக்குப் பின்புறமாக ஒளிந்து கொண்டானாம்.

பிறகு மகா அறிவாளியும் புண்யவதியுமான காந்தாரி தன் கோபத்தை அடக்கிக் கொண்டு பாண்டவர்களை ஆசீர்வதித்து விட்டு அவர்களைக் குந்தியிடம் போகச் சொன்னாள்.

பிறகு, தன் புத்திரர்கள் அனைவரையும் இழந்து புலம்பிக்கொண்டிருந்த திரௌபதியைப் பார்த்துக் காந்தாரி "பெண்ணே! துக்கப்படாதே! உன்னையும் என்னையும் எவன் தேற்றப் போகிறான்? என்னுடைய குற்றத்தினாலேயே இந்தக் குலம் நாசம் ஆயிற்று" என்றாள்.



# கிணறு வெட்ட....

பகீரதன்

சிறுகளத்தூர் சின்னசாமிப் பிள்ளையிடம் சுமார் பதினைந்து வருஷத்துக்கு மேலாக வேலை பார்த்து வரும் ஒரே மனிதர் காசிநாதன் ஒருவர்தான். பிள்ளையின் குண விசேஷங்கள் அத்தனையும் நன்றாக அறிந்தவர். சின்னசாமிப் பிள்ளை காசிநாதனை நம்பி எவ்வளவோ காரியங்களை ஒப்படைத்திருந்தார்.

'சோழவளநாடு சோறுடைத்து' என்று பழம் பெரும் புலவர்கள் பாடிவைத்த நாட்டிலும் பஞ்சமா?—என்று பயப்படும்படியான நிலைமை ஏற்பட்ட இந்தச் சமயத்தில் சின்னசாமிப் பிள்ளை தன்னுடைய காரியஸ்தர் காசிநாதனைக் கூப்பிட்டார். "நம்முடைய நிலங்களை மூன்று போகமும் சாகுபடி செய்ய உத்தேசித்திருக்கிறேன். அதற்காக நமது நிலங்களுக்கு மத்தியில் ஒரு பெரிய கிணறு வெட்ட வேண்டும். ஆயிரம் ரூபாய் தான் செலவழிக்க முடியும்" என்றார்.

★

கிணறு வெட்டும் வேலை வெகு மும்முரமாகக் காரியஸ்தர் காசிநாதன் மேற்பார்வையில் நடந்து கொண்டிருந்தது. முக்கால்வாசி வேலை நடந்துவிட்டது என்று சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்த சமயத்தில் ஒரு நாள் திடீரென்று காசிநாதன் மனம் கலங்கும்படியான காரியம் நடந்து விட்டது.

முக்கால் பாகத்துக்கு மேல் வெட்டியிருந்த கிணற்றின் ஓரமெல்லாம் பெயர்ந்து கிணற்றை அப்படியே தூர்த்து விட்டிருந்தது. அதைப் பார்த்த காசிநாதன் கைத் தடியைக் கீழே போட்டுவிட்டுத் தலைப்பாகையைக் கழற்றித் தரையில் வைத்து விட்டுச் சரிந்து விழுந்து தூர்ந்து போயிருந்த கிணற்றின் மேல் கன்னத்தில் கையை ஊன்றிக் கொண்டு கவலையாக உட்கார்ந்திருந்தார்.

திடீரென்று ஏதோ யோசனை தோன்றவே வேகமாகக் கிளம்பிச் சென்ற காரியஸ்தர் காசிநாதன் சாயங்காலம் ஐந்து மணி சுமாருக்குத் திரும்பி வந்தார்.

★

என்ன ஆச்சரியம்! கிணற்றைத் தூர்த்துக் கிடந்த மண்ணை எல்லாம் தோண்டி எடுத்துவிட்டு ஆட்கள் மேலும் மேலும் ரொம்ப வேகமாக வேலை செய்து கொண்டிருந்தார்கள். காசிநாதனைக் கண்டதும் ஒருகணம் எல்லாரும் ஆச்சரியத்துடன் அவரைப் பார்த்தார்கள்.

"சாமி, வந்திங்களா! நாங்கள் எல்லாம் பயந்தே போய்விட்டோம். காலையிலே வேலைக்கு வந்து பார்த்தோம். தங்களுடைய தலைப்பாகையும் கைத் தடியும் மட்டும் கரையிலே இருந்தது. கிணறு பூராவும் தூர்ந்து கிடந்தது. நீங்கள் கிணற்றிலே இறங்கி ஏதோ பார்த்திருக்கிறீர்கள் அந்தச் சமயத்திலே பாறை இடிந்து உங்க மேலே விழுந்து விட்டதாக்கும் என்று பயந்து அவசர அவசரமாக அந்த மண்ணையும் வெட்டி எடுத்தோம். நல்ல வேளை நீங்கள் நேரே வந்து எங்கள் வயிற்றில் பாலை வார்த்தீர்கள்!" என்றார்கள்.

காரியஸ்தர் காசிநாதன் வேலையாட்கள் அப்படி நினைத்துக் கொண்டு வேலையை சீக்கிரம் முடிக்க வேணும் என்பதற்காகவே தம்முடைய தலைப்பாகையையும் தடியையும் அங்கே வைத்துவிட்டுச் சென்றார் என்பது அவர்களுக்கு எப்படித் தெரியும்?



"ரொம்ப அவசரமாப் போகணும். கொல்லைக் காட்டுத் தெருவுக்கு என்னப்பா கேப்பே?"

# தி இந்தியன் பாங்க்
## லிமிடெட்.

★

தலைமை ஆபீஸ்:
"இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்"
வடக்கு பீச் ரோடு, மதராஸ்

★

லோகல் ஆபீஸ்கள்:
எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி
மவுண்டு ரோடு, மயிலாப்பூர்,
தியாகராய நகர், புரசவாக்கம்,
எழும்பூர்.

சென்னை மாகாணத்தில் எல்லா முக்கியமான இடங்களிலும், பம்பாயிலும் பிராஞ்சுகளும் சப் ஆபீஸ்களும் உள்ளன.

★

ழங்கி வாக்களிக்கப்பட்ட
மூலதனம் ரூ. 68,71,800
சலுத்தப்பட்ட
மூலதனம் ரூ. 44,42,662
ஸர்வ் நிதி ரூ. 49,50,000
டபாஸிட்டுகள்:
31-12-45 முடிய
ரூ. 13½ கோடிக்கு அதிகம்

★

சகலவிதமான பாங்க் அலுவல்களும் நடத்தப்படும். மற்ற விவரங்களுக்குப் பாங்கியின் எந்த ஆபீஸுக்காவது எழுதி தெரிந்து கொள்ளலாம்.

N. கோபால அய்யர்
செக்ரடரி.

101

31-3-46 ஞாயிறு
கடைசி நாடகம்!

# டி. கே. எஸ்.
சகோதரர்களின்
நாடகங்கள்

## திருச்சி
## முனிசிபல் ஹாலில்

★

4-3-46 (ஒரே நாள்)
## மனோஹரா

★

5-3-46 முதல் (மூன்று நாட்கள்)
## 'அந்தமான் கைதி'
(By. கு. சா. கிருஷ்ணமூர்த்தி)

★

8-3-46 (ஒரே நாள்)
## மனோஹரா

★

9-3-46 (ஒரே நாள்)
## இராமாயணம்

★

11-3-46 முதல்
## மேனகா
(By. வடுவூர் துரைசாமி ஐயங்கார்)




### பிரபல மருந்து!

புதிய கம்பௌண்டர் (மருந்துக்கடையில்): அதோ தெரிகிறதே, அந்த மருந்து எதற்குக் கொடுப்பது?

கடை முதலாளி:—அது தானே? 'பிரிஸ்கிரிப்ஷ'னைப் படித்துப் புரிந்து கொள்ள முடியாவிட்டால் அதைக் கொடுக்கிறோம். அது தான் அதிகம் செலவாகிறது!

—பெரி. தியாகராஜன்.



### ஞாபகமூட்டும் விஷயம்!

எஜமானர் (வேலைக்காரனிடம்):—இந்த வேலையை ஏன் இன்னும் செய்து முடிக்கவில்லை?

வேலைக்காரன்:—மறந்து விட்டேனுங்க.

எஜமானர்:—நான் சம்பளம் கொடுக்க மறந்து விட்டால் என்ன செய்வாய்?

வேலைக்காரன்:—உடனே உங்களுக்கு ஞாபகமூட்டுவேனுங்க. —எம். என். து.



### செலவு விஷயம்!

மனைவி:—தாங்கள் முன்போல் என்மீது ஆசையாக இல்லை.

கணவன்:—ஏன்? உனக்கு எப்படித் தெரியும்?

மனைவி:—நான் அழுவதைப் பார்த்துச் சும்மா இருக்கிறீர்களே?

கணவன்:—நான் விசாரிக்க ஆரம்பித்தால் தான் செலவு வைத்து விடுகிறாயே!

—எம். என். துரைசாமி.



### போன காரணம்!

தகப்பனார் (உட்கார்ந்திருந்தவரைப் பார்த்து):—ஏன்? இன்னும் ஒரு பாட்டு பாடச் சொல்லட்டுமா?

வந்தவர்:—வேண்டாம். 'மழை' நின்று விட்டது. நான் போகிறேன்.

—ஆர். சாமிநாதன்.



### சம்பள உயர்வு!

எஜமானர் (கோபத்துடன்):—நீ உடைத்த சாமான் உன் சம்பளத்தைவிட அதிக விலையாச்சே! இதற்கு என்ன செய்கிறது?

வேலைக்காரன்:—இந்த மாதத்தி லிருந்து என் சம்பளத்தை உசத்திப் போடுங்க, சாமி!

—ஆர். ஜி. மூர்த்தி.

### நல்ல யுக்தி!

தகப்பனார்:—ராமு, மணி என்னடா? பார்த்துச் சொல்லு!

ராமு:—அக்கா, மணி என்ன பார்த்து சொல்லேன்!

அக்கா:—அம்மா, ராமு மணி கேட்கிறா கொஞ்சம் பார்த்துச் சொல்லேன்!

அம்மா (கணவனிடம்):—கொஞ்சம் ரா வுக்கு மணி பார்த்துச் சொல்லுங்கோ!

—ஏ. வரதராஜு



### ஞாபகமில்லையா?

ராமு:—நீ கொடுக்க வேண்டிய சொந்த தொகைக்கு நாலு தரம் வரச் சொல்லிவிட் இல்லே என்கிறாயே அப்பா!

கிட்டு:—என்னப்பா, பிரமாதமாகப் பே றாயே! உங்கிட்டே இதை வாங்குவதற் எத்தனை தரம் நடந்தேன், ஞாபகமில்லையா!

—பி. என். நாதன்



### நாடகமேடையில்!

நடிகை:—உங்களுக்கு என்மேல் என் கோபம்? இவ்வளவு நாட்களாக என்னி வந்து பார்க்கவே யில்லையே!

நடிகர் (நாடகம் பார்க்க வந்தவர்களை கட்டிக் காட்டி):—இவ்வளவு ஜனங்க உன்னைப் பார்க்க வந்திருக்கும் பொழு எனக்கு என்ன கவலை?

—டி. பாலகிருஷ்ண



### வெந்நீர்தானு?

"டாக்டர் என்னைக் காப்பி சாப்பிட கூடாது, வெந்நீர்தான் சாப்பிடவேண்டுமென் சொல்லி விட்டார்."

"சரிதான்! அதனால்தான் இனிமேல் நம் ராயர் ஓட்டலுக்கு வருகிறீர்கள் போலும்!"

—என். வி. துரைசா



### பேர்வாங்கின இடம்!

நண்பர்:—என்ன பாகவதர்வாள், நேற் நடந்த கச்சேரியிலே பேர் வாங்கினேளோ!



பாகவதர்:—நான் பிறந்தவுடனே எங்கப் பேர் கொடுத்து விட்டாரே, இந்தப் பசங்க கிட்டயா பேர் வாங்கணும்?

—எம். வேலாயுதநாத

# ஒரு அவசியமான புதிய இணைப்பு

சுந்தரம் டிரான்ஸ்போர்ட் லிமிடெட்

ஆரம்பிக்கின்றனர்.

# திண்டுக்கல்-வத்தலக்குண்டு

மார்க்கம்

## கால அட்டவணை.

| திண்டுக்கல் | செம்பட்டி | | வத்தலக்குண்டு |
|---|---|---|---|
| பு.ற. | சேர். | பு.ற. | சேர். |
| காலை 5-00 | காலை 5-40 | காலை 5-45 | காலை 6-30 |
| காலை 10-00 | காலை 10-40 | காலை 10-45 | காலை 11-30 |
| மாலை 2-00 | மாலை 2-40 | மாலை 2-45 | மாலை 3-30 |
| மாலை 6-15 | மாலை 6-55 | மாலை 7-00 | மாலை 7-45 |

| வத்தலக்குண்டு | செம்பட்டி | | திண்டுக்கல் |
|---|---|---|---|
| பு.ற. | சேர். | பு.ற. | சேர். |
| காலை 8-00 | காலை 8-45 | காலை 8-50 | காலை 9-30 |
| பகல் 12-00 | பகல் 12-45 | பகல் 12-50 | பகல் 1-30 |
| மாலை 4-15 | மாலை 5-00 | மாலை 5-05 | மாலை 5-45 |
| இரவு 8-00 | இரவு 8-45 | இரவு 8-50 | இரவு 9-30 |

**திண்டுக்கல்லில்**

எல்லா நேரங்களிலும் டாக்ஸிகள் கிடைக்கும்

## சுந்தரம் டிரான்ஸ்போர்ட் லிமிடெட்

**மதுரை**

# உங்கள் பற்களை 60% அதிக செம்மையாகத் துலக்குகிறது!

நீர் கடக்காது
நெளிவுமேற்காது

ஒரு வருட
உத்தரவாதமுடையது

விஷக் கிருமிகளகற்றப்
பட்ட கிலாஸ் டியூபுகளில்
பாக் செய்யப்பட்டது

இப்பொழுது
கிடைக்கும்

மிருகங்களின்
மயிரே
கிடையாது!

Dr. West's
Miracle-Tuft
MEDIUM

Dr. West's
TOOTH
PASTE

விநியோகஸ்தர்கள்:

எல். டி. ஸெய்மூர் & கோ
(இந்தியா) லிமிடெட்

12/1, லிங்க செட்டித் தெரு
தபால்பெட்டி 200, மதராஸ்

# டாக்டர் வெஸ்ட்ஸ்
## டூத் பிரஷுகளும் டூத் பேஸ்டும்

D. W. 6284

# கம்பர் தரும் காட்சி

## 131. உயர்ந்த லக்ஷ்ய வீரர்கள்

டி.கே.சி

சாம்ராஜ்ய சக்கரவர்த்தியான ராவணனது தங்கையை அல்லவா அவமானப் படுத்தி விட்டான்? இதைச் சகிக்க முடியவில்லை சூர்ப்பணகைக்கு.

வானமெல்லாம் எதிரொலிக்கும்படி கதறுகிறாள். "அண்ணா! ராவணனே! இந்திரஜித்தே! கரதூஷணர்களே! நான் கதறுவது உங்கள் காதில் விழவில்லையா!" என்றெல்லாம் கூவி அழைக்கிறாள். உதவி ஒன்றும் வருகிற பாடாயில்லை.

அப்படியே ஓடிப் போய்த் தன் சிறிய தாயார் மகனான கரனது காலில் விழுகிறாள். புண்பட்ட மூக்கிலிருந்தும் வாயிலிருந்தும் வடிந்த ரத்தம் ஒரே படலமாய் மண்ணில் பரவி ஓடி நிற்கிறது. அதன்மேல் அவளது கரிய உருவம் கிடக்கிறது.

சந்தம்

தான தன்னன
தன்னன தன்னன

இருந்த மாக்கரன்
தாள்இணை யின்மிசை,
சொரிந்த சோரியன்,
கூந்தலன், தூம்பெனத்
தெரிந்த மூக்கினன்
வாயினன்,— செக்கர்மேல்
விரிந்த மேகம்
எனவிழுந் தாள்அரோ!

[இருந்த மாக்கரன்: ஆசனத்தில் அமர்ந்திருந்த கரனது; தாள் இணையின் மிசை: பாதங்களின் மேல்; சொரிந்த சோரியன் கூந்தலன்: சிந்திய ரத்தம் படர்ந்து கிடக்கக் குலைந்த கூந்தல் அதில் விரிந்து விழவும்; தூம்பெனத் தெரிந்த மூக்கினன் வாயினன்: தூம்பாக் குழிபோலக் கக்கவும் கழியவுமாயுள்ள துளைபட்ட மூக்கோடும் வாயோடும்; செக்கர்மேல் விரிந்த மேகம் என விழுந்தாள்: செவ்வானத்தின்மேல் விரிந்து கிடக்கும் கருமேகம்போல் விழுந்தாள்; அரோ: அடடா! அந்தக் காட்சியை என்ன என்று சொல்லுகிறது.]

கரன் ராவணனது சிறிய தாயார் மகன்; ராவணனுடைய சேனாதிபதிகளில் ஒருவன். சூர்ப்பணகை தண்டகாரணியத்தில் சௌகரியமாக வசிக்க வேண்டும். அவளுக்கு வேண்டிய சௌகரியங்கள் செய்து கொடுக்க வேண்டும் என்று கருதியே கரனை அங்கே இருக்கச் செய்தான் ராவணன். கரனுடைய காலடியில் விழுந்த சூர்ப்பணகை ஹோ என்று அலறினாள். அலறிய சப்தம் நாலா பக்கமும் கேட்டது.

'அரக்கர்களுக்கு முடிவு நாள் வந்துவிட்டது' என்ற எமன் கட்டளையின்படி பேரிகை கொட்டியமாதிரி இருந்தது அவள் போட்ட சப்தம்.

அழுங்கும் நாள்இதென்(று)
அந்தகன் ஆணையால்த்
தழுங்கு பேரி
எனத்தனித்(து) ஏங்குவான்,
முழுங்கு மேகம்
முடித்தவெம் தீயினால்ப்
புழுங்கு நாகம்
எனப்புரண் டாள்அரோ.

[அழுங்கும் நாள் இதென்று: அரக்கர்களுக்கு முடிகிற காலம் இதுதான் என்று தெரிவிக்கும்படி; அந்தகன் ஆணையால்த் தழுங்கு பேரி என: எமனது கட்டளைப்படி சாற்றும் பேரிகை போல; தனித்து ஏங்குவான்: இதர சப்தம் எல்லாம் அடங்கும்படி கதறினாள்; முழுங்கு மேகம் முடித்தவெம் தீயினால்: இடிக்கின்ற மேகம் தன்னிடத்தே வைத்துள்ள மின்னலத் தீயானது தலையில் விழுந்து தாக்கவும்; புழுங்கும் நாகம் என: வேதனைக்குள்ளான சர்ப்பத்தைப் போல; புரண்டாள் அரோ: அப்படியும் இப்படியுமாகப் புரண்டாள்.

குறிப்பு:—பேரிபோல் ஏங்கினாள் என்பதை வைத்து ஒரு பேரொலியைக் கேட்க வேண்டும் நம்முடைய காது. புழுங்கு நாகம் எனப் புரண்டாள் என்பதை வைத்து மனவேதனையைப் பார்க்க வேண்டும்.]

சூர்ப்பணகையின் வேதனையைப் பார்க்கக் கரனுக்குச் சகிக்கவில்லை. ஆங்

காரமான வார்த்தைகள் அவனுடைய வாயிலிருந்து வருகின்றன.

வாக்கிற்(கு) ஒக்கப்
  புகைமுந்து வாயினன்
நோக்கிக் ‘கூசலர்
  நுன்னை இத் தன்மையை
ஆக்கிப் போனவர்
  ஆர்சொல்'என் றான் அவன் ;—
மூக்கில்ச் சோரி
  முழீஇக்கொண்ட கண்ணினன்.

[வாக்கிற்கு ஒக்கப் புகை முந்து வாயினன்: வார்த்தையைப் போலவே வெப்பமாய்ப் புகையும் வருகிறது வாயிலிருந்து: நோக்கி: சூர்ப்பனகையைக் கொஞ்சம் அமைதியாக நோக்கி: கூசலர் நுன்னை இத்தன்மையை ஆக்கிப் போனவர் ஆர். சொல்: பயமே இல்லாமல் உன்னை இந்த விதமாக மான பங்கம் செய்துவிட்டுப் போனவர்கள் யார், நன்றாய்ச் சொல்; என்றான் அவன்: என்று கேட்டான் கரன்:—மூக்கில்ச் சோரி முழீஇக் கொண்ட கண்ணினன்: மூக்கிலிருந்து வந்த ரத்தத்தால் இரண்டு கண்களும் ஒரே படியாய் முழுகடிக்கப் பட்டிருந்தன—அத்தகைய கண்ணோடே விஷயத்தைச் சொல்ல ஆரம்பிக்கிறாள் சூர்ப்பனகை.]

சூர்ப்பனகையைக் காதல் பேய் வந்து ஆட்டுகிறது. காதலன் என்று எண்ணும் போது இழைத்த துன்பம், அவமானம் எல்லாம் மனசை விட்டு அகன்று விடுகின்றன. காதல் தத்துவம் ஒன்றே அதிகாரம் செய்கிறது. இந்த முறையில் பார்க்க வேண்டும் சூர்ப்பனகையின் வார்த்தைகளை!

‘இருவர் மானுடர்
  தாபதர், ஏந்திய
வரிவில் வாள்க்கையர்,
  மன்மதன் மேனியர்,
தரும நீரர்,—
  தயரதன் காதலர்,—
செருவில் நேரும்
  நிருதரைத் தேடுவார்.’

[இருவர் மானுடர் தாபதர்: இரண்டு மனிதர்கள், தவவேடம் கொண்டவர்கள்; ஏந்திய வரிவில் வாள்க் கையர்: கையில் வில்லையும் வாளையும் ஏந்தியவர்கள்; வரிவில்: தெரியாதபடி வில்லின் தண்டை வார்கொண்டு இறுகக் கட்டி வைத்திருப்பது வழக்கம். மன்மதன் மேனியர்: மன்மதன் போன்றவர்கள்; தருமநீரர்: தருமத்தை விட்டு விலகாதவர்கள்:—செருவில் நேரும் நிருதரைத் தேடுவார்: யுத்தம் செய்ய வரும் அரக்கர்கள் யாராவது இருக்கிறார்களா என்று தேடிக் கொண்டும் இருக்கிறார்கள்.]

மேலும் சொல்லுகிறாள்: உன்னுடைய பராக்கிரமத்தை அவர்கள் கொஞ்சங் கூடப் பொருட் படுத்துவதாக இல்லை. தர்மத்தை நிலைநாட்டுவது என்ற ஒரே பிடிவாதமான நோக்கத்தோடு வந்திருக்கிறார்கள்.

‘ஒன்றும் நோக்கலர்
  உன்வலி; ஒங்(கு)அறன்
நின்று நோக்கி
  நிறுத்தும் நினைப்பினர்;
வென்றி வேல்க்கை
  நிருதரை வேர்அறக்
கொன்று நீக்குதும்
  என்றுணர் கொள்கையார்.’

இராம லக்ஷ்மணர்களது அபூர்வமான உருவமும் அழகும் ஞாபகத்திலேயே இருந்த காரணத்தினால் சூர்ப்பனகையின் வாயிலிருந்து வருவதெல்லாம் பாராட்டாகத்தான் இருக்கிறது. இப்படி வந்துவிட்டதே என்ற நினைவும் அவளுக்கு வருகிறது. அதன்மேல் என்ன செய்யப் போகிறாள் என்று பார்க்கலாம்.

# திருச்சி சங்கீத சபை (Regd)ன் நிதிக்காக

2-3-46 சனிக்கிழமை (மஹாசிவராத்ரி) மாலை 6 மணிக்கு

மலைக்கோவில் நூற்றுக்கால் மண்டபத்தில்

## மும்மணிகளும் மாணிக்கமும்!

| | | |
|---|---|---|
| கானகலாதர மதுரை மணி அய்யர் | ... | பாட்டு |
| கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை | ... | வயலின் |
| பாலக்காடு மணி அய்யர் | ... | மிருதங்கம் |
| பழனி சுப்ரமணிய பிள்ளை | .... | கஞ்சிரா |

டிக்கட் ரூ. ௩, ௨, 1. இடத்திற்கு முந்துங்கள்!

---

9—3—46 (சனிக்கிழமை)

10—3—46 (ஞாயிற்றுக்கிழமை)

இரண்டு தினங்கள் மாலை 6 மணிக்கு

## முனிசிபல் பப்ளிக் ஹாலில்

சென்னை நடன கலா நிலயம்

## ஸ்ரீஜத் நடராஜ்-சகுந்தலா & பார்ட்டியாரால்

சாகுந்தலம், நிர்வாணம், ஆண்டாள் கல்யாணம்

முதலிய உயர்தர நடனங்கள் கலர் விளக்குகளுடன் நடைபெறும்.



தினசரி டிக்கட்:

ரூ. 10, 5, 3, 2, 1

சீஸன் ரூ. 15, 8.

முதல் இரண்டு வகுப்புகளை முன்னதாக ரிசர்வ் செய்து கொள்ளலாம்.

ஒலிபெருக்கி:

Rdaio Television Ltd.



உங்கள் உதவி! சபையின் வளர்ச்சி!

---

டிக்கட்டுகள் கிடைக்குமிடம்:

10, விநாயகபுரம், தென்னூர், திருச்சி

# வேஷதாரி

## விந்தன்

விருத்தாசலம் பாயில் படுத்துப் பத்துப் தினைந்து நாட்களாகி விட்டன. இதன் ரணமாக, அவனுடைய மனைவியான பான்னியும் கண்ணயர்ந்து ஒரு வார கால கிவிட்டது. இந்த நிலையில் எந்த நேரமும் "என்னுடைய வயிற்றுக்கு வழி என்ன?" ன்று அவர்களைப் பிய்த்துப் பிடுங்கிக் காண்டிருந்தது ஒரு குழந்தை; சின்னஞ் சிசுதான்.

இவர்களுக் கெல்லாம் 'கார்டிய'னுக ருந்தது ஒரே ஒரு கறவை மாடு! ஜமானும் எஜமானியும் தன்னை எத்தனை ளைக்குத்தான் பட்டினி கிடக்கச் செய் ாலும், அது இயற்கையாகக் கிடைக்கும் ல் பூண்டுகளை மேய்ந்து விட்டு வந்து, ளுக்கு உழக்குப் பாலையாவது கறந்து டும். அந்தப் பாலிலிருந்து ஒரு பாலாடை டத் தன்னுடைய குழந்தைக் கென்று டுத்துக் கொள்ள மாட்டாள் பொன்னி. அதற்கென்ன கேடு! கத்தும் போது காஞ்சம் சர்க்கரைத் தண்ணீரை ஊற்றி வத்தால் போச்சு!" என்பது அவ ளுடைய எண்ணம்!

ன் தெரியுமா? விருத்தாசலம் பாயில் டுத்துவிட்ட பிறகு அவர்களுடைய ழைப்பே அந்தப் பாலில்தான் இருந்தது. ந்த உழக்குப் பாலுடன் அவள் பாவ ண்ணியத்தைக்கூடக் கவனிக்காமல் காஞ்சம் தண்ணீரைச் சேர்த்து வீடு டாகச் சென்று விற்று விட்டு வருவாள். ப்படிச் செய்தால்தான் அவர்கள் ங்களுடைய வயிற்றுக் கவலையை ஒரு றாவது தீர்த்துக் கொள்ள முடிந்தது.— யாயந்தானே? வயிற்றுக் கவலை இன்ன ன்று அறியாதவர்களே பாவ புண்ணி த்தைப் பற்றிக் கொஞ்சக்கூடக் கவலைப் டாம லிருக்கும்போது, பொன்னியைப் ான்றவர்கள் கவலைப்பட முடியுமா?

நோயின் வேகம் எவ்வளவுதான் திகரித்த போதிலும், விருத்தாசலம், 'சக் க்கு மிஞ்சிய மருந்து மில்லை; சுப்ரமணிய க்கு மிஞ்சிய தெய்வமும் இல்லை' என்னும் மொழியில், தான் வைத்திருந்த நம்பிக் கையைக் கடைசி வரை இழக்காமலே இருந் ன். அவனுடைய நிலையில், அவற்றைத் தவிர வேறு எதில்தான் நம்பிக்கை வைக்க முடியும்? கடைசியில், சக்தியும் அவனைக் காப்பாற்ற வில்லை; சுப்ரமணியக் கடவுளும் காப்பாற்ற வில்லை. நினைத்தபோது எதிரே வந்து நின்றதற்காக எத்தனையோ பெரியோர்கள், "அப்பா! உனக்கு ஆயுசு நூறு!" என்று விருத்தாசலத்தை வாழ்த்தி யிருப்பார்களே, அவர்களுடைய வாக்கும் ஓரள வாவது பலிக்கவில்லை. முப்பதாவது வயதிலேயே அவனுடைய மூச்சு நின்று விட்டது.

பொன்னி புலம்பினாள்; ஓய்ந்தாள்.

★

"பெண்ணைப் பிறந்தவர்கள் எல்லோருமே ஆணைப் பிறந்தவர்களைத்தான் என்றும் நம்பி வாழ வேண்டும்" என்ற நியதியை ஏற்படுத்தியவர்கள், இரு பாலாருக்கும் இறைவனிட மிருந்து சிரஞ்சீவித் தன்மையையாவது வாங்கிக் கொடுத்தார்களா? இல்லை; "ஆண்களைப் போல் பெண்களும் மறு மணம் செய்து கொள்ளலாம்" என்றாவது விதித்தார்களா? இல்லை; ஒன்று மட்டும் செய்திருந்தார்கள். 'உடன் கட்டை ஏறுதல்' என்று ஒரு வழக்கத்தை ஏற்படுத்திவைத்து, அதன் மூலம் இருவரையும் ஏககாலத்தில் செத்துப் போகச் சொன்னார்கள்! அதிலும் ஒரு வேடிக்கை இருக்கத்தான் இருந்தது. ஆணுக்காகப் பெண்தான் சாக வேண்டும்; பெண்ணுக்காக ஆண் சாகவே கூடாது! எப்படி விவகாரம்? — இருந்தாலும், இந்த நியதியைக் கூடத்தான் அந்தப் பாழாய்ப் போன வெள்ளைக்காரன் வந்து கெடுத்து விட்டானே, பொன்னி என்ன செய்வாள்?

தற்கொலை செய்து கொள்ளலாம் — அதற்கும் குறுக்கே யிருந்தது குழந்தை!

பின், என்னதான் வழி?

பிறந்தகத்திலும் பெற்றோர்கள் இல்லை. அவர்கள் இருவருமே மண்ணுலகத்தை விட்டுப் பிரிந்து ஒரு மாமாங்கமாகி விட்டது. அண்ணா ஒருவனும், அவனுடைய மனைவி மக்களும்தான் அங்கே இருந்தனர். ஆனால் சொத்து மட்டும் சுமாராக இருக்கத்தான் இருந்தது. பெற்றோர்கள் சம்பாதித்தது தான். இருந்தும் என்னத்தைச் செய்ய?

—பொன்னிதான் பெண்ணாச்சே! அவள் ஆணாய்ப் பிறந்திருந்தாலும், "அடேய்! எனக்கும் பாகம் பிரித்துக் கொடு!" என்று மல்லுக்கு நின்றிருக்கலாம். அப்படி நிற்க உரிமையும் உண்டு. பெண்ணாய்ப் பிறந்தவளுக்கு அந்த உரிமை ஏது?

விருத்தாசலம் அவளுக்காக வைத்துவிட்டுச் சென்ற சொத்துக்களோ மூன்று வகையானவை: ஒன்று, கூலி வேலை; இரண்டாவது, ஒரு கைக் குழந்தை; மூன்றாவது ஒரு எருமை!

கூலி வேலை கிடைத்தால் உண்டு; குழந்தை குடிக்கப் பாலின்றி வளர்ந்தால் உண்டு; எருமை ...?

ஆமாம்; ஆண்டவனை விட அந்த எருமைதான் இப்போது அவளுக்கு ஆறுதல் அளிக்கக் கூடியதாயிருந்தது!

அந்த ஆறுதலும் நெடுநாள் நீடிக்கவில்லை. ஆறு மாதங்களுக்கெல்லாம் அந்த எருமை கருவற்று விட்டது!

அப்புறம் என்ன? இருக்கும்போது பொன்னியின் வீட்டு அடுப்பு எரிந்தது; இல்லாத போது அணைந்தது.

★

அருகில் இருந்தவர்களில் ஒருத்தி, ஒரு நாள் பொன்னியை நோக்கி, "ஏன், பொன்னி! இப்படியே இருந்தா எப்படி? அந்த எருமையை யாருக்காச்சும் வித்துவிட்டுப் பணத்தை எடுத்துக்கிட்டுப் பேசாம உங்க அண்ணாச்சி வீட்டுக்காச்சும் போய்ச் சேருவதுதானே?" என்று கேட்டாள்.

"நல்லாச் சொன்னே! 'உள்ளதும் போச்சு நொள்ளைக் கண்ணா!'ன்னு ஆவுதற்கா? அந்தப் பணம் இருக்கிற வரைக்கும் அவன், 'இங்கே வா, தங்கச்சி! அங்கே வா, தங்கச்சி!'ன்னு சொல்லிக்கிட்டு இருப்பான்! அப்புறம் 'அவன் யாரோ, நான் யாரோ?'தானே?"

"என்னடி, அப்படிச் சொல்றே? அந்த வீட்டிலே உனக்கில்லாத அதிகாரம் வேறே யாருக்கு?"

"ஆமாம்; கன்னக்கபடு இல்லாத அந்தக் காலத்திலேயே, அண்ணாச்சி வீட்டுக்குப் போன நல்லதங்காளின் கதி என்ன ஆச்சு?"

"அவள் வகை கெட்டவ, அதனாலே அவளுக்கு அந்த கதி! நீ போய் அடிச்சுப் பிடிச்சு, அந்த வீட்டிலே அதிகாரம் பண்ணைப் பார்க்கணும்......"

"அதுக்கென்ன, அடுத்த வீட்டுக்காரிக்குப் புத்தி சொல்றதுன்னா யாருக்கும் சுலபமாத்தான் இருக்கும். நா ஒண்ணு சொ... கிறேன், நீ கோவிச்சுக்குவியா?"

"என்ன, கேளேன்!"

"உன் புருசனுடைய தங்கச்சி, அடிச்சு பிடிச்சு உன்னை அதிகாரம் பண்ண ஆ... பிச்சா நீ சும்மா இருப்பியா?"

"நீ போடி, அம்மா! நான் அவ்வள... ஊரத்துக்கு வரலே. என்னமோ நல்லது சொல்ல வந்தா, அதுக்கா என்னை இப்படி குத்திக் கேக்கறே?" என்று 'சட்'டென் எழுந்து போய் விட்டாள் அவள்.

அதற்குமேல்தான் அவள் என்னத்தை சொல்வது? என்னமோ 'ஊருக்கு உ... தேசம்' செய்யும் சில சீர்திருத்த வாதிகளை போல அவளும் பேசிப் பார்த்தாள். கடை... வில், அவள் அப்படித் திருப்பிக் கேட்ப... என்று எதிர்பார்த்தாளா?

★

எந்த விதத்திலும் தங்களுடை... சுயநலத்தைக் காப்பாற்றிக் கொள்ளு... திருக்கூட்டத்தில் இரண்டு விதம் உண்... ஒன்று, பிறரைப் பகைத்துக் கொண்... தன்னுடைய சுயநலத்தைக் காப்பாற்... கொள்ளும்; இன்னொன்று, பிறரை பகைத்துக் கொள்ளாமலேயே தன்னுடை... சுயநலத்தைக் காப்பாற்றிக் கொள்ளும்.

இரண்டாவதாகக் குறிப்பிட்ட கோஷ்... யைச் சேர்ந்தவன்தான் பொன்னியி... அண்ணன். விருத்தாசலத்தின் இறு... சடங்கின்போது வந்திருந்த அவன், போ... போது பொன்னியை நோக்கி சொன்னான்:

"அம்மா! உன் மனசு இப்போ என்... வெல்லாமோ நினைக்கும். 'அண்ணன் இ... கச்சே நமக்கு என்ன பயம்?' என்றுகூட... தோணும். நிசந்தான் அம்மா, நிசந்தா... ஆனா, உலகத்திலே அண்ணன்தான் ந... வனாயிருக்க முடியுமே ஒழிய, அவனு... வந்தவகூட நல்லவளாயிருக்க முடியும... நீயே யோசிச்சுப் பாரு!—அதுதான் ந... சொல்றேன், என்னமோ கடவுள் கொடு... கையையும் காலையும் வைச்சுக் கி... நீ பாட்டுக்கு இருக்கிறதுதான் நல்ல... என்னமோ, அண்ணன் தொல்லை தொ... தரவு இல்லாமல் இன்னும் கொஞ்ச காலம் இருக்கணும்னு அப்படிச் செய்; ... வேண்ணு வேணும்!"

இதற்குப் பொன்னி என்ன மறுமொ... சொல்வாள்? "அப்படியே ஆகட்டும், அ... ணாச்சி!" என்றுதான்!

ஆகவே, பேதை பொன்னி, அந்தக் றவை மாட்டையே கடைசி வரை நம்பி ள். அது கருவுற்ற போதும், "இன்னும் ந்து மாதம் பல்லைக் கடித்துக் கொண்டு ள்ளி விடுவோம்" என்று பெரிதும் றுதல் அடைந்தாள்.

★

**நா**ட்கள் ஓடிக் கொண்டிருந்தன. ந்தாவது மாதமும் பிறந்தது, அந்த ட்டுக்கு!—"அப்பாடி!" என்று பெரு ச்சு விட்டாள் பொன்னி.

"அந்த நாள் என்று வரும், அந்த நாள் ன்று வரும்?" என்று அவளுடைய ள்ளம் துடியாய்த் துடித்துக் கொண் ருந்தது. கடைசியில், அந்த நாளும் ஒரு ன் வாத்தான் வந்தது. "என்ன ருமோ?" என்று அவள் ஏங்கினாள். லை வேளை, அவளுடைய ஏக்கம் தாக்கத் ல் முடியவில்லை. எருமை ஈன்றது!

பொன்னிக்கு மட்டில்லாத மகிழ்ச்சி! பாழுது புலர்ந்ததும் புள்ளினங்கள் அடை ம் ஆனந்தத்தை அவளும் அடைந்தாள்! ன்னுடைய பாலைவனவாழ்க்கையில், அவள் சும்புற் தரையையும் படிகநீரத் தண்ணீர் றைந்த தடாகத்தையும் கண்டாள்.

பொன்னியின் வாழ்க்கைச் சரித்திரத்தில் ரு புது அத்தியாயம் ஆரம்பமாயிற்று.

தினந்தோறும் "பாலோ, பாலு!"— தயிரோ, தயிரு!"—"மோரோ, மோரு!" —"நெய் வாங்கலையா, நெய்!" என்று வளைக்கு வேளை அந்தக் கிராமத்தின் எட் டுத் திக்கும் எதிரொலி செய்யுமாறு இன்னி சையோடு இரைந்து விற்று விட்டு வந்தாள்.

காலடைவில், ஒரு எருமை இரண்டு எருமைகளாகி, இரண்டு மூன்றாகி, மூன்று நான்காகவே ஆகி விட்டன. காதில் அணிந் திருந்த சிவப்பு ஓலைச் சுருள்கள், செந் நிறக் கற்கள் பதித்த கம்மல்களாக மாறின. மூக்கில் செருகி யிருந்த விளக்குமாற்றுக் குச்சி, ஜொலிக்கும் ஒற்றைக்கல் பதித்த மூக்குத் திருகாணி யாயிற்று. கைகளை அலங்கரித்துக் கொண்டிருந்த பித்தளைக் காப்புகள், 'தகதக' வென்று மின்னும் தங்கக் காப்புகளாக ஜன்ம மெடுத்தன!

இப்பொழுதெல்லாம் அவள் தன்னுடைய குழந்தை கத்தும்போது, "அதற்கென்ன கேடு! கொஞ்சம் சர்க்கரைத் தண்ணீரை ஊற்றி வைத்தால் போச்சு!" என்று என்னுவதில்லை; "அவனுக்கு இல்லாத பாலா! அவன் குடித்து மீந்த பாலை விற்றால் போச்சு!" என்று நினைத்தாள்!

★

**இ**ந்த இரண்டு வருட காலமும் ஒரு நாளாவது பொன்னியின் வீட்டுப் பக்கமே எட்டிப் பார்த்திராத அவளுடைய அண்ணன், திடீரென்று ஒரு நாள் அவளைத் தேடி வந்தான். அப்படி வரும்போது அவன் சும்மா வரவில்லை; ஒரு அழகான காரணத் தையும் சொல்லிக்கொண்டு வந்தான்.

"பொன்னி! இந்த மனசு இருக்குதே, அது ரொம்ப ரொம்பப் பொல்லாதது!



எத்தனை நாளா உன்னைப் பார்க்கணும், பார்க்கணும்னு அடிச்சிக்கிட்டு இருந்தது, தெரியுமா? எங்கே, வேலை ஒழிஞ்சாத்தானே! அதில்லாம எத்தனையோ தொல்லை, தொந்தரவுங்க! வீட்டுக் கூரை பொத்தலாப் போச்சு, வாரது மழைக்காலம், அதைப் பிரிச்சுக் கட்டறதுன்னு இப்போ ஐம்பது ரூபாயாச்சும் வேணும்; உழவுமாடு ரெண்டும் நிமோனு 'சீக்கு' வந்து செத்துப்போச்சு, திரும்ப வாங்கிறதுன்னு இருநூறு ரூபாயாச்சும் ஆகும். அடித் தூறல் தூறது, நாலு கலம் விதை நெல்லு வாங்கி விதைக்கலாம்னு கையிலே காசில்லே! — உம், அப்படியெல்லாம் இருக்குது, என் கஷ்டம்! இங்கே வந்து உன்னுடைய கஷ்டத்தையும் பார்த்து என் இன்னும் கஷ்டப்படணும்னுதான் நான் இத்தனை நாளா இங்கே வரலே, தங்கச்சி!" என்று ஒரே 'கஷ்ட'மாகச் சொல்லிக்கொண்டே, அவன் மேலே போட்டுக் கொண்டிருந்த துண்டை யெடுத்துக் கண்களைத் துடைத்துக் கொண்டான்!

"இப்போது நிலைமை கொஞ்சம் நன்றாயிருக்கவே என்னைத் தேடி வந்தாயாக்கும்!" என்று பொன்னி பதிலுக்குக் கேட்டிருக்கலாம். ஆனால், அவள் ஏனோ அப்படிக் கேட்கவில்லை; "அழாதே, அண்ணாச்சி!" என்று அவனைத் தேற்ற ஆரம்பித்து விட்டாள்!

பெண்மை உள்ளத்தின் பெருமையை அறியாத அந்தப் பாவி, தன்னுடைய தந்திரம் பலித்தது என்று நினைத்தானோ என்னமோ, உடனே அந்த 'நாலு பேர்' இருக்கிறார்களே, நன்மைக்கும் தீமைக்கும் — அவர்களைத் துணைக்கு அழைத்துக் கொண்டு விட்டான்!



"ஏன் டாக்டர் ஸார்! உங்களுக்கு டைபாயிட் வியாதியில் ஏதேனும் அனுபவமுண்டா?"

"என்ன! என்னைக் கேட்கிறீரே, தாராளமா உண்டு. எனக்கே அது இருபது வருஷமா இருந்து கொண்டு இருக்கிறதே!"

"அம்மா! எத்தனை கஷ்டங்கள் என இருந்தாலும், இனிமே உன்னுடைய · டத்தைப் பார்த்துக்கிட்டு என்னு ஒரு நிமிசம்கூடச் சும்மா இருக்க முடியா 'நாலு பேரு' சொல்றது என் காதி காராசமா விழுறது!......"

"ஐயோ! அப்படி என்ன அபாண் சொன்னாங்க, அண்ணாச்சி?"

"வேறே என்ன சொல்லுவாக் தங்கச்சி! 'என்ன இருந்தாலும் ஒரு . யாத பொண்ணு, சின்னஞ் சிறிசு, அ. துப் போட்டவ, ஊரிலே இருக்கிற தடி களுக்கு மத்தியிலே ஒண்டியா யிரு லாமா?'ன்னு அவங்க கேக்கறாங்க. அ என்னாலே காது கொடுத்துக் கே முடியலே. 'அறுத்தவ ஆத்தா வீட்டி என்று பெரியவங்க சொல்லுவாங்க! அ படி நீ என் வீட்டிலே வந்து இருக்கி தான் நல்லது! என்ன, நான் சொல்றது

அன்று கடவுள் கொடுத்த கையை காலையும் நம்பி வாழச் சொன்ன அண்ண இன்று ஏன் இப்படிச் சொல்கிறான்? பெ ணிக்குப் புரியாமல் போகவில்லை. ஆனா அவள் சிறிது நேரம் சும்மா இருந்தாள்.

"என்ன அம்மா, யோசிக்கிறே? இ விசயத்திலே யோசிக்கிறதுக்கே ஒண் யில்லையே!"

அவளால் தாங்க முடியவில்லை; 'கல கென்று சிரித்துவிட்டாள். 'அண்ணா யின் முகம் கண்டிவிட்டது "ஏன் அம் சிரிக்கிறே?" என்று கேட்டான், ஏதோ பறி கொடுத்தவன்போல்.

"ஒண்ணுமில்லை, அண்ணாச்சி! எப் இருந்தாலும் கடவுள் கொடுத்த கையை காலையும் வைச்சுக்கிட்டு, நான் பாட்டு இருக்கிறதுதான் நல்லது, அண்ணாச் இன்னும் கொஞ்ச நாளைக்கு நீ தொல் தொந்தரவு இல்லாமல் இருக்க வேணுமா என்றாள் பொன்னி.

அவள் அவ்வாறு சொல்லி வாய் மூடிய தான் தாமதம், அவன் தன்னுடை 'வேஷ'த்தைக் கலைத்தான். "ஓஹோ அம்மட்டுத் தூரத்துக்கு வந்துட்டியா? இனிமே உன் வீட்டு வாசல்லே கா வைச்சா ஜோட்டை எடுத்துக்கோ என்று வீராப்புடன் சொல்லிக் கொண் துண்டை உதறித் தோளில் போட் கொண்டு எழுந்தான்!

அவன் எதிர்பார்த்தபடி, பொன் அவனுடைய காலில் விழுந்து தன் மன்னிக்கும்படி வேண்டிக் கொள்ளவில்

# மகாரசிகரும் மலேரியாவும்

கவிதையை ரசிக்கலாம்; கற்கண்டை ரசிக்கலாம்.

ஆனால், மலேரியா ஜுரத்தை யாரும் ரசித்ததாக நாம் கேள்விப்பட்டதில்லை!

நாம் கேள்விப்படாத அந்த விஷயம் முப்பது வருஷங்களுக்கு முன்னாலே திருநெல்வேலியில் நிகழ்ந்திருக்கிறது.

அங்கே ஒருவர் இந்த மலேரியா ஜுரத்தை மனப்பூர்வமாக ரசித்து அநுபவித்தார் என்பதையும், எட்டு வருஷ காலம் அந்த மலேரியாவுடன் கொஞ்சிக்குலாவிய பின்னரே அதனிடம் பிரியா விடை பெற்றாரென்பதையும் அறியும் போது, இந்த அதிசயத்தை யாரிடம் போய்ச் சொல்வது என்று யோசிக்கிறோம் அல்லவா?

யாரிடம் போய்ச் சொல்வது என்று நாம் எதற்காக யோசிக்க வேண்டும்? சந்தேகமில்லாமல், கம்பனிடம் போய்த்தான் சொல்ல வேண்டும்! ஏனெனில், ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களுக்கு மிகவும் வேண்டியவர்களுக்குள்ளே கம்பனுக்கு மிஞ்சி வேறு யார் இருக்கிறார்கள்?

• • •

முப்பது வருஷங்களுக்கு முன்னால் ஸ்ரீ முதலியார் அவர்களுக்கு வந்த மேற்படி மலேரியா ஜுரத்துக்கு இன்று தமிழ் நாட்டின் சார்பாகவும் தமிழ்மக்களின் சார்பாகவும் நம் மனப்பூர்வமான நன்றியறிதலையும் வந்தனங்களையும் தெரிவித்துக் கொள்கிறோம். அன்று மலேரியா செய்த அருஞ்சேவையைத் தமிழ்நாடும் தமிழ் மக்களும் மகா கவியாகிய கம்பனும் என்றென்றும் நினைவில் வைத்திருப்பார்களென்றும் கருதுகிறோம். மலேரியா ஜுரம் வந்து ஸ்ரீ முதலியார் அவர்களை எட்டு வருஷ காலம் தன்னுடைய ஆதிக்கத்தின்கீழ் வைத்திருந்து வேறு எந்த வேலையிலும் கருத்தைச் செலுத்தாமலும் எந்த இடத்துக்கும் போக முடியாமலும் பண்ணியிராமற் போனால், பாரகாவிய மாகிய கம்பராமாயணத்தை அவர் எப்படி ஆர அமரப் படித்து ரசித்திருக்க முடியும்? செருகு கவிகளை எப்படிக் கண்டு பிடித்திருக்க முடியும்? கம்பனுடைய புகழை எப்படித் தமிழ் நாடெங்கும் பரப்ப முடியும்? அத்தகைய ஓய்வும் அமைதியும் கிடைத்திரா விட்டால், ஸ்ரீ டி. கே. சி. தம் நாட்டிலுள்ள ஆயிரக்கணக்கான வக்கீல்களிலே ஒரு வக்கீலாக இருந்து, இ. பி. கோ. வையும் சி. பு. கோ. வையுமல்லவா ஆராய்ந்து ரசித்துக் கொண்டிருப்பார்!

ஆகவே, அத்தகைய ஒரு பெரிய விபத்திலிருந்து தமிழ் இலக்கியத்தைக் காப்பாற்றியதற்காகத் தமிழ்நாடு மலேரியா ஜுரத்துக்கு மிகவும் கடமைப் பட்டிருக்கிறது.

ஸ்ரீ முதலியார் அவர்களைப் பற்றியும் அவருக்கு வந்த மலேரியா ஜுரத்தைப் பற்றியும் இப்போது எதற்காகச் சொல்ல வந்தோ மென்றால், நாளது 1941 வருஷத்திலே இந்தியர்களாகிய ந சுதந்திரத்தை நோக்கி வெகு வேகமா போய்க் கொண்டிருக்கிறோம் என்ற மகிழ்ச் செய்தி ஒரு புறமிருக்க, தமிழ் மக்கள் தங் தலைவர்களையும் அறிஞர்களையும் மதித் பாராட்டத் தொடங்கி யிருக்கிறார்கள் எ பதற்கு அறிகுறியாகச் சமீபத்திலே புத்தகம் வெளிவந்திருக்கிறது. அதன் பெய ரசிகமணி டி. கே. சி., என்பதாகும்.

• • •

கவிதையை உணர்ந்து அநுபவிப் கடினமான காரியம். கவிஞரை உணர்ந்து அ பவிப்பது அதைவிடக் கடினமான காரியம்.

இந்த இரண்டையும் விட அதிகக் கஷ் மான காரியம், ஒரு ரசிகரின் சிறப்பை உள் படி உணர்ந்து அநுபவித்து அவரை பாராட்டுவதாகும்.

கவிதையையும் கவிஞரையும் பற்றி வாறு ரஸமாக எழுதி விடலாம்; கஷ்டமா லும் அசாத்தியமான காரியம் அல்ல.

ஆனால் ஒரு ரசிகரையே பற்றி ரஸம எழுதுவது எல்லாராலும் முடிகிற கா மல்ல. ரசிகரை உணர்வதற்கு ரசி தன்மை வேண்டும். அவரைப் பாரா வதற்கு விசால மனப்பான்மை வேண்டு அவரைப் பற்றி ரஸமாக எழுதுவத அசாதாரண திறமை வேண்டும்.

இந்த நூலின் ஆசிரியர் ஸ்ரீ பாஸ்க தொண்டைமானிடம் மேற்படி அம்சங்க எல்லாம் பொருந்தி யிருப்பதைக் காண்கிறோ

ஸ்ரீ டி. கே. சி. யை அவர் எவ்வளவு ஆ மதித்திருக்கிறார் என்பதைப் பின்வரும் களில் காண்கிறோம் :—

"ஆயிரம் வருஷங்களுக்கு ஒருமுறைதா ஒரு மகாகவி தோன்றுகிறான் என்றால், இர டாயிரம் வருஷங்களுக்கு ஒரு முறைதா ஸ்ரீ டி. கே. சியைப் போன்ற ஒரு மகா ரசி தோன்றுகிறார்."

ஸ்ரீ பாஸ்கரத் தொண்டைமான் டி. கே. யுடன் பல வருஷ காலம் நன்கு பழகியவ டி. கே. சி. யைப் போல அவரும் கம்பனு அடிமையாகப் போனவர். டி. கே. சி. யை பற்றி எழுதுவதற்கு எல்லா வகையிலு தகுதியானவர்.

ஸ்ரீ தொண்டைமான் டி. கே. சி. யை எ வளவு நன்றாக அறிந்திருக்கிறார்; அவருடை பிரசங்கத்தை எவ்வளவு நுட்பமாகக் வனித்துக் கேட்டிருக்கிறார் என்பதற்குக் கீ கண்ட வரிகள் சான்றாகும்.

"கம்பனைப் பற்றி, தமிழ்க் கவிதையை பற்றிப் பேசும்போது, டி. கே. சி. யின் ந பேசும்; டி. கே. சி. யின் வாய் பேசு அடர்ந்த நெற்றிப் புருவம் பேசும்; செழித் வளர்ந்துள்ள மீசை பேசும்; எல்லா

---

ரசிகமணி டி. கே. சி. ஆசிரியர் : பாஸ்கரத் தொண்டைமான்; பிரசுரம் : ஸ்டார் பிரசு பாலக்கரை, திருச்சி; விலை : ரூ. 2—0—0.

...க்கும் மேலாக அவருடைய உள்ளமே நம்முடைய உள்ளத்தோடு பேசும்'' என்று ஸ்ரீ தொண்டைமான் சொல்லும்போது, ''ஆமா, குருவுக் கேற்ற சிஷ்யர் என்றால் இவர்தான்!'' என்று நமக்குச் சொல்லத் தோன்றுகிறது.

• • •

ரசிகமணி டி. கே. சி. சொந்த வாழ்க்கையில் மிக்க தயாளு; தமிழகத்தின் பூர்வீகமான பண்பாடே உருவெடுத்தவர். விருந்தோம்பல் என்றால் என்ன, நட்புரிமை என்றால் என்ன, மரியாதை என்றால் என்ன—என்பதையெல்லாம் அவரிடந்தான் தெரிந்து கொள்ள வேண்டும்.

ஆனாலும், சில விஷயங்களில் தாட்சண்யமே இல்லாமல் வெகு கண்டிப்பாக இருப்பவர் ரசிகமணி.

உதாரணமாக, கவிதை யில்லாததை அவர் கவிதை என்று ஒருநாளும் ஒத்துக்கொள்ள மாட்டார். நல்ல வசனநடை யில்லாததை நல்ல வசனநடை யென்று மரியாதைக்குக் கூடச் சொல்ல மாட்டார். பள்ளிக்கூடங்களையும் உபாத்தியாயர்களையும் அவரால் பாராட்டிப் பேசமுடியாது. 'மெட்ராஸ் யுனிவர்ஸிடி'யைப் பற்றியோ, மெட்ராஸ் யுனிவர்ஸிடி 'கிராஜு-வேட்'களைப் பற்றியோ அவரால் ஒருநாளும் நல்ல வார்த்தை சொல்ல முடியாது. எப்பேர்ப்பட்ட அத்தியந்த நண்பருக்காகவும் மரியாதைக்காகக்கூட, ''தெலுங்குப் பாட்டை அனுபவித்தேன்'' என்று அவரால் சொல்ல இயலாது. ''டெக்ஸ்ட் புத்தகங்களை யெல்லாம் நெருப்பிலே போடவேண்டும்'' என்று அடிக்கடி சொல்லாமலிருக்கவும் முடியாது.

இத்தியாதி காரணங்களினால் ரசிகமணி டி. கே. சி. அவர்களிடம் அன்பும் அபிமானமும் கொண்டவர்களைப் போலவே, விரோதிகளும் இலக்கிய உலகத்தில் அநேகர் உண்டு.

சிற்சில விஷயங்களில் அபிப்பிராய பேதம் இருந்த போதிலும் பொருட்படுத்தாமல் பெரியவர்களைப் போற்றும் வழக்கம் தமிழ் நாட்டில் இன்னும் போதிய அளவு பரவவில்லை யென்பதைக் காண்கிறோம்.

இந்த நிலைமையில் ஸ்ரீ பாஸ்கரத்தொண்டைமான் நமது ரசிகமணியை வஞ்சனை யில்லாமல் புகழ்ந்து பாராட்டி, அவருடைய அரும் பெரும் குணங்களைச் சிலாகித்து, உண்மையை உள்ளது உள்ளபடி அணிந்து எழுதியது மிகவும் பாராட்டத் தக்கதாகும்.

• • •

மனிதர் என்ற முறையிலும், ரசிகர் என்ற முறையிலும், டி. கே. சி. அவர்களின் தனிப் பெரும் மேன்மையை நன்கு உணர்ந்து அநுபவிக்கும் இரண்டு பெரியார்கள் தமிழ் நாட்டில் உண்டு. அவர்கள் ராஜாஜியும், திருப்புகழ் மணி கிருஷ்ணசாமி ஐயர் அவர்களுமாவர். இந்த இருவரில் திருப்புகழ் மணி இந்த அழகிய புத்தகத்துக்கு ரஸமான முன்னுரை தந்திருப்பது மிகவும் பொருத்தமானது.

தமிழ் நாட்டுப் பெரியார் ஒருவரைப் பற்றிய இவ்வளவு அருமையான நூலை மிக அழகான முறையில் வெளியிட்டிருக்கும் 'ஸ்டார்' பிரசுராலயத்தாரைப் பெரிதும் பாராட்டுகிறோம். அவர்களுக்குத் தமிழ்நாட்டு ரசிகர்களின் சார்பாக நமது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

—எம். எல். எஸ்.



# விடுமுறை விளையாட்டு

ராஜி

அன்று விடுமுறையானதால் என்ன விளையாட்டு விளையாடலாம் என்று சந்துருவும் லக்ஷ்மியும் யோசித்துக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது சந்துருவுக்கு ஒரு விநோதமான யோசனை தோன்றிற்று. உடனே அவன் லக்ஷ்மியைக் கூப்பிட்டு, "லக்ஷ்மி, நான் நல்ல விளையாட்டு ஒன்று சொல்லுகிறேன், கேள்! நீ ஒரு நோட் புஸ்தகத்தையும், பென்சிலையும் எடுத்துக் கொள். நானும் ஒரு நோட் புஸ்தகத்தையும், பென்சிலையும் எடுத்துக் கொள்ளுகிறேன். நான் இந்த வீதி மேற்கு முனையில் நின்று கொண்டு இந்தத் தெரு வழியே போகும் எல்லா மோட்டார்கார் நம்பர்களையும் எழுதுகிறேன். நீயும் அதே மாதிரி இந்த வீதியின் கிழக்குக்கோடியில் நின்று கொண்டு போகும் மோட்டார்கார் நம்பர்களையெல்லாம் எழுதிக் கொண்டு வா. பிறகு, நாம் இருவரும் நம்முடைய நோட் புஸ்தகத்தில் எழுதியிருக்கும் நம்பர்களை ஒப்பிடலாம். என்ன சொல்லுகிறாய்?" என்று கேட்டான்.

"சரி" என்று கூறிவிட்டு, லக்ஷ்மி உள்ளே ஓடிப்போய் இரண்டு நோட்டுப் புஸ்தகங்களும் இரண்டு பென்சில்களும் எடுத்து வந்தாள். சந்துரு ஒரு நோட்டுப் புஸ்தகம் பென்சிலுடன் மேற்குக் கோடி தெரு முனைக்குச் சென்றான். லக்ஷ்மி கிழக்கோடியில் நின்று கொண்டாள். மத்தியானம் 11 மணி வரையில் சந்துருவும் லக்ஷ்மியும் வீதியில் போன மோட்டார்களின் நம்பர்களைத் தனித் தனியாக எழுதிக் கொண்டார்கள்.

பகல் பதினொரு மணிக்குச் சாப்பாட்டுக்கு உட்காரும் பொழுது சந்துரு "லக்ஷ்மி, உன்னால் எல்லா கார் நம்பரையும் சரியாக எழுதிக் கொள்ள முடிந்ததா?" என்று கேட்டான். அதற்கு லக்ஷ்மி "எல்லா நம்பரையும் சுலபமாக எழுதி விட்டேன். ஆனால் ஒரு கார் மிகவும் வேகமாகப் போயிற்று. இருந்தாலும் அதன் நம்பரையும் எழுதி விட்டேன்" என்றாள்.

உடனே சந்துரு, "ஆமாம், ஆமாம், அந்தப் பச்சைக் கார்தானே? அது மற்ற கார்களைவிட வேகமாகத்தான் போயிற்று. இருந்தாலும் நானும் அதன் நம்பரை எழுதிக் கொண்டு விட்டேன்!" என்றான்.

இப்படி அவர்கள் பேசிக் கொண்டிருக்கையில் ரேடியோவில் ஏதோ பேச்சுக் கேட்டது:

**"எச்சரிக்கை! இன்று காலை 10—30 மணிக்கு இவ்வூர் சூரி பாங்கின் பத்தாயிர ரூபாய் திருட்டுப் போய் விட்டது. கொள்ளைக்காரர்கள் ஒரு பச்சைக் காரில் வந்து பணத்தைக் கொள்ளையடித்துக்கொண்டு உடனே திரும்பி விட்டார்கள். காரின் நம்பர் M. C. P. 2038 என்று சொல்லப்படுகிறது. இந்தத் திருட்டைப் பற்றித் தெரிந்தவர்கள் சமீபத்தில் உள்ள போலீஸ் ஸ்டேஷனுக்குத் தகவல் தெரிவிக்கும்படி போலீஸ் கமிஷனர் கேட்டுக் கொள்கிறார்."**

இதைக் கேட்டதும் சந்துரு, "லக்ஷ்மி, ஒரு வேளை வேகமாக ஓடிய பச்சைக் கார், ரேடியோவில் சொல்லிய திருட்டுக் காராக இருக்குமோ? ரேடியோவில் சொல்லிய காரின் நம்பர் நாம் குறித்திருக்கும் நோட் புஸ்தகத்தில் இருக்கிறதா பார்க்கலாம்!" என்றான்.

உடனே லக்ஷ்மி தன் நோட் புஸ்தகத்தைப் பார்த்து விட்டு, "அந்த நம்பர் என்னுடைய நோட் புஸ்தகத்தில் இருக்கிறது!" என்று குதித்தாள்.

உடனே சந்துரு தன் நோட் புஸ்தகத்தைப் பார்த்து விட்டு, "என்ன இது! என் நோட் புஸ்தகத்தில் அந்த நம்பரைக் காணுமே! அதெப்படி வித்தியாசம் வரும்? நாம் இருவரும் ஒரே கார்களின் நம்பரைத்தானே எழுதினோம்?" என்றான்.

உடனே சந்துருவுக்கு ஒரு யோசனை தோன்றிற்று. அவன் லக்ஷ்மியை அழைத்துக் கொண்டு தைரியமாகப் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போனான். இன்ஸ்பெக்டர் சந்தோஷத்துடன் குழந்தைகள் இருவரையும் அன்பாக அழைத்து, "என்ன சமாசாரம்?" என்று கேட்டார்.

சந்துரு நடந்த சமாசாரங்களைச் சொன்னான். போலீஸ் இன்ஸ்பெக்டர் அவர்கள் இரண்டு பேருடைய நோட்டுப் புஸ்தகங்களிலும் உள்ள நம்பர்களைக் கூர்ந்து கவனித்தார். உடனே "திருடன் அகப்பட்டுக் கொண்டான்!" என்று இன்ஸ்பெக்டர் குதித்தார். தலைமை ஆபீஸுக்குச் செய்தி பறக்கவே பெரிய துரை வந்தார். நோட் புஸ்தகத்தைப் பார்த்தார். "திருடனின் கார் நம்பர் MCP 2038. ஆனால் அந்தக் கார் நம்பர் மற்றொரு நோட் புஸ்தகத்தில் இல்லை. ஒரே வீதியில் போன காருக்கு எப்படி இரண்டு நம்பர் இருக்க முடியும்? 'இதிலிருந்து என்ன தெரிகிறது என்றால், திருடியவன் தப்பித்துக் கொள்ளுவதற்காக வீதியின் நடுவில் காரின் நம்பரை MD *318 என்று மாற்றியிருக்க வேண்டும்!" என்று சொன்னார்.

உடனே டெலிபோனில் சமாசாரம் போயிற்று. அரை நொடியில் பச்சைக் காருடன் திருடனும் அகப்பட்டுக் கொண்டான்.

பெரிய துரை சந்துருவையும் லக்ஷ்மியையும் சந்தோஷத்துடன் கைகுலுக்கி, "நீங்கள் மிகவும் கெட்டிக்காரக் குழந்தைகள். உங்கள் நோட் புஸ்தகம் இல்லாவிட்டால் இந்தத் திருட்டைக் கண்டுபிடிக்கவே முடியாது!" என்று கூறினார்.

பிறகு, சந்துருவையும் லக்ஷ்மியையும் தம்முடைய காரில் ஏற்றிக் கொண்டார். அவர் ஆளுக்கொரு வெள்ளிக் கோப்பையைப் பரிசாகக் கொடுத்து, அவர்கள் இருவரையும் பங்களாவில் கொண்டுவந்து விட்டார். "உங்கள் குழந்தைகள் மிகவும் கெட்டிக்காரக் குழந்தைகள்!" என்று சந்துருவின் தகப்பனாரின் கைகளைக் குலுக்கினார்.

தகப்பனார் சந்தோஷத்தினால் சந்துருவையும் லக்ஷ்மியையும் அணைத்துக்கொண்டார். அவர்களுடைய தாயாரும் அந்தச் சந்தோஷத்தில் கலந்து கொண்டாள்.



பையன்:—இப்படிச் செய்து விட்டால் பட்சணத்தை நாய் திருடுவதாகவே அம்மா நினைத்துக் கொண்டு போய் விடுவாள்.

# வெற்றி யாருக்கு?

கே. மோஹன்

"என் இஷ்டப்படிதான் பெயர் வைப்பேன்" என்று பிடிவாதம் பிடித்தாள் லட்சுமி. "கூடாது" என்றான் அவளுடைய கணவன்.

"இந்தத் தடவை மட்டும் என் இஷ்டப்படி விட்டுவிடு. எனக்குச் சின்னத் தாத்தா ஒருவர் இருந்தார். ரொம்ப நல்லவர். அவருடைய பெயரை நம்ப குழந்தைகளில் யாருக்காவது வைக்க வேண்டுமென்று எனக்கு ரொம்ப நாளாக ஆசை" என்றான்.

"அதெல்லாம் முடியாது; நீங்கள் என்ன சொன்னாலும் சரி; எனக்கு இருந்ததெல்லாம் ஒரே மாமாதான். இந்தப் பிள்ளைக்கு அவருடைய பெயரைத்தான் வைக்கப்போகிறேன்; அவர்தான் என்னை எடுத்து வளர்த்தார்" என்று லட்சுமி மீண்டும் தன் விருப்பத்தையே வற்புறுத்தினாள். அதுவரையில் பொறுமையோடு பேசிக்கொண்டு வந்த அவளுடைய கணவனுக்குக் கோபம் வந்து விட்டது. விர்ரென்று பேசாமல் மாடி அறைக்குப் போய் விட்டான்.



ஆனால் லட்சுமி என்னவோ அவனுடைய கோபத்தைச் சிறிதாவது லட்சியம் செய்ததாகத் தோன்றவில்லை.

மணி ஆறு அடித்தது. கூடத்தில் உட்கார்ந்திருந்த லட்சுமியின் சிநேகிதிகள் அத்தனை பேரும் "லட்சுமி! இராகுகாலம் போயிடுத்து! இனிமேல் குழந்தைக்குப் பெயர் வைக்கலாம்! உன் குழந்தைக்கு என்ன பெயர் வைக்கப் போறே?" என்று வெகு ஆவலுடன் கேட்டார்கள். "ராமகிருஷ்ணன் என்று பெயர் வைக்கப் போறேன்" என்று லட்சுமி பெருமையோடு சொல்லிவிட்டுக் குழந்தையைத் தொட்டிலில் இட்டாள். இந்த வார்த்தைகள் மாடியிலிருந்த அவளுடைய கணவன் காதில் விழுந்ததுதான் தாமதம்! அவனுக்குக் குதூகலத்தில் ஒன்றுமே புரியவில்லை.

"என்ன இது! ...... ஆச்சரியமாயிருக்கே! கடைசியிலே என் இஷ்டப்படியே என் சின்னத் தாத்தாவின் பெயரை வைக்க அவள் சம்மதிப்பாள் என்று நான் கொஞ்சம்கூட நினைக்க வில்லையே! ஆஹா! ...... லட்சுமி பேரிலே நாம் இத்தனை நாழி வீணாகக் கோபித்துக் கொண்டிருந்து விட்டோமே! பாவம்! உடனே ஓடிப் போய் அவளிடத்தில் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளலாம்" என்று தீர்மானித்துக் கொண்டு வெகு வேகமாகக் கீழே இறங்கி வந்தான்.

"கடைசியிலே என் இஷ்டப்படியே, என் சின்னத் தாத்தாவின் பெயரைத்தான் வைக்கப் போறேன்னு முன்பே சொல்லியிருந்தால் கோபித்துக் கொண்டிருக்கவே மாட்டேன், லட்சுமி!" என்று அன்பு ததும்பக் கூறினான்.

"அட ராமச்சந்திரா! உங்க சின்னத் தாத்தாவின் பெயரும் ராமகிருஷ்ணன்தானா? பேஷ்! அது முன்னமேயே தெரிந்திருந்தால் நானும் உங்களோடே தர்க்கமே பண்ணியிருக்கமாட்டேனே!" என்று கூறி விழுந்து விழுந்து சிரித்தாள் லக்ஷ்மி.



# ஜெயில் ஆர்டர்

சுந்தர்

"ஆனந்த விலாஸ்" ரமணி அய்யரின் பேரில், மாணிக்கஞ் செட்டியார் ரூ. 800-க்கு ஒரு டிக்கிரி பெற்றார். ரமணி அய்யர் தம்முடைய ஹோட்டலை மூடி ஒரு வருஷத்துக்கு மேல் ஆகிவிட்டது என்றும், சகல சாமான்களையும் விற்றுப் பணத்தைக் கையடக்கம் செய்துகொண்டதாகவும், தம்முடைய கடனை மோசம் செய்யக் கருதி, வெளியூருக்குப் புறப்பட ஏற்பாடு செய்வதாயும், அவரை உடனே 'வாரண்'டில் பிடித்து விட்டால் பணம் வசூல் ஆகிவிடும் என்றும் மாணிக்கஞ் செட்டியார் தம்முடைய வக்கீலின் மூலம் ஒரு மனு எழுதி, கோர்ட்டில் தாக்கல் செய்தார்.

சட்டப்படி பிரதிவாதி ரமணி அய்யருக்கு வாரண்டு விஷயமாய் நோட்டீஸ் அனுப்பப் பட்டது:—

"வாதிக்குச் சேரவேண்டிய டிக்கிரி தொகையைக் கொடுக்க உமக்குச் சக்தி இருந்தும் நீர் கொடுக்காததால், உம்மை ஏன் ஜெயிலுக்கு அனுப்பக் கூடாது என்பதற்குத் தகுந்த முகாந்திரங்களை நீர் நாளது 11-7-44ல் கோர்ட்டில் காலை 11 மணிக்கு ஆஜராகித் தெரிவித்துக் கொள்ள வேண்டியது. தவறினால் நீர் ஜெயிலுக்கு அனுப்பப்படுவீர் என்பதை அறியவும்."

இதைப் படித்துவிட்டுச் சற்று யோசனை செய்ய ஆரம்பித்தார் ரமணி அய்யர். அந்தச் சமயத்தில் வக்கீல் குமாஸ்தா ராமு அய்யர் அங்கு வந்து சேர்ந்தார். அவர், ரமணி அய்யரின் நோட்டீசைப் படித்துப் பார்த்துவிட்டு, "ஏன் ஐயா, நோட்டீசுக்குத் தகுந்தபடி நடந்து கொள்ள வேண்டியதுதானே?" என்றார்.

"என்ன சொல்கிறீர்? எனக்கு ஒன்றும் புரியவில்லையே! நான் என்ன, ஜெயிலுக்கா போவது?" என்று கேட்டார் ரமணி அய்யர்.

"இல்லை ஐயா, இல்லை. நான் கோர்ட்டில் பழகிய வரையிலும், தற்காலம் அனுஷ்டானத்தில் இருக்கிற படிக்கும் இம்மாதிரி நோட்டீசுக்கு அர்த்தம் என்னவென்றால், 'ஏ, பிரதிவாதியே! உன்னை ஜெயிலுக்கு அனுப்ப வேண்டுமென்று வாதி தங்கள் பேரில் மனு கொடுத்திருக்கிறபடியால், இந்த நோட்டீசைப் பார்த்தவுடனே நீர் வேறு கோர்ட்டு இலாக்காவுக்கோ, அல்லது, வாரண்டு சேவகனும் வாதியும் கண்டுபிடிக்க முடியாத இடத்திற்கோ ஓடிப்போய் ஒளிந்து கொள்ள வேண்டியது!' என்பதுதான். அதன்படி நீர் நடந்து கொள்ள வேண்டியதுதானே!" என்றார் குமாஸ்தா.

இந்த உபதேசம் ரமணி அய்யருக்குப் பிடிக்கவில்லை. "ஐயா, ராமு அய்யரே! இந்த ரேஷன் காலத்தில் நான் இங்கே இருந்துகொண்டுதான் என்ன சுகத்தைக் காணப் போகிறேன்? ஆகவே, சட்டப்படி கட்டுப் படுவதாகத்தான் எனக்கு உத்தேசம். நான் ஜெயிலுக்குப் போகத்தான் போகிறேன்" என்றார் அவர்.

அதற்குமேல் ராமு அய்யர் என்னத்தைச் சொல்வது? "உம்முடைய இஷ்டம்!" என்று நடையைக் கட்டினார்.

★

நோட்டீசில் கண்டபடி 11-7-44ல் பிரதிவாதி ரமணி அய்யர் காலை 11 மணிக்கெல்லாம் கோர்ட்டில் ஆஜரானார்.

கோர்ட்டுக்கு வெளியில் இருந்த செட்டியார், ரமணி அய்யரைக் கவனித்துப் பார்த்தபோது, அவருடைய இடுப்பில் கட்டியிருந்த வேஷ்டியில் ஏதோ ஒரு பெரிய முடிச்சு இருப்பதைக் கண்டார். அதில் பணம் கட்டாயம் இருக்க வேண்டுமென்றும், ஜெயிலுக்கு அனுப்பும்படி கோர்ட்டார் அவர்கள் உத்தரவு போடும் பட்சத்தில், கட்டாயம் தம்முடைய பணம் கலகலவென்று ரமணி அய்யரின் மடியிலிருந்து கொட்டு கொட்டென்று கொட்டுமென்றும் எண்ணினார் செட்டியார்.

அவர் உடனே தம்முடைய வக்கீலிடம் ஓடோடியும் சென்று, மிகவும் ரகசியமாக, "வக்கீல் ஸார், நமது காரியம் ஜயம். ஆசாமியின் மடியில் பணம் இருக்கிறது. ஜெயில் ஆர்டர் போட்டதும் பணம் வசூலாகிவிடும். ஆகையால், கோர்ட்டாரவர்களுக்கு எடுத்துச் சொல்லி, அவருக்கு எப்படியாவது ஜெயில் ஆர்டர் கொடுக்கும்படியும், நான் ஜெயில படி கட்டத் தயாராயிருக்கிறேன் என்பதையும் சொல்லுங்கள்" என்றார். வக்கீலும், "அப்படியே ஆகட்டும்" என்றார்.

ஜட்ஜ் :—ஏன் ஐயா, ரமணி அய்யரே! என்ன சொல்கிறீர்? பணம் செலுத்து கிறீரா, ஜெயிலுக்குப் போகிறீரா?

ரமணி அய்யர் :—ஸ்வாமி! என்னிடம் பணமில்லை. அடியேன் ஜெயிலுக்குப் போகத் தயாராயிருக்கிறேன்.

வக்கீல் :—யுவர் ஆனர், பிரதிவாதி சொல்வது பொய். அவர் மடியில் பணம் கொண்டு வந்திருப்பதாக என் கட்சிக் காரர் சொல்லுகிறார்.

ஜட்ஜ் :—ஓஹோ! உமது மடியில் என்ன ஐயா முடிச்சு? பணம்தானே?

ரமணி அய்யர் :—பணத்துக்கு மேல் உயர்ந்தது, ஸ்வாமி! நான் எப்பொழு தும் கைவிடாதது. அதை யாருக்கும் கொடுக்க மாட்டேன்!

இந்தச் சமயத்தில், செட்டியார் தம் முடைய வக்கீலின் காதோடு காதாகப் பிரதிவாதியின் மடியில் இருப்பது அவ ருடைய கடுக்கன், தங்கச் சங்கிலி, மோதிரம் இவைகள் என்று எண்ணி, முடிச்சை அவிழ்த்துக் காட்டும்படி கேட்கச் சொன்னார்.

வக்கீல் :—பிரதிவாதிக்குக் கடன் கொடுக்கச் சக்தி இருக்கிறதா, இல்லையா என்பது கோர்ட்டாருக்குத் தெரிய வேண்டுமென்றால் அதற்கு ஒரே வழிதான் உண்டு. தயவு செய்து ரமணி அய்யரின் மடியில் இருக்கும் முடிச்சை அவிழ்த்துக் காட்டும்படி உத்தரவு செய்ய வேணும்.



"வாங்கோ பாட்டி! இது என்ன இது, கையில் துப்பாக்கி?"
"ரயிலில் ஒரே ஸோல்ஜர் கூட்டம்; அத னாலே சாமான் மாறிவிட்டது."

ஜட்ஜ் :—ரமணி அய்யரே, எடும் ஐயா, முடிச்சை! என்னவென்று பார்ப்போம்.

ரமணி அய்யர் :—எடுப்பதைப் பற்றி எனக்கு ஒன்றும் ஆக்ஷேபணையில்லை. ஆனால், அதை என்னிடமே திருப்பிக் கொடுத்துவிட வேண்டும்.

வக்கீல் (கோபத்துடன்):—அது வாதி யின் இஷ்டம்; கோர்ட்டார் உத்தரவுக்கு உட்பட்டது. உமக்கு அதிகாரம் கிடை யாது! எடும் ஐயா, முடிச்சை!

ரமணி அய்யர் தயக்கத்துடனும் லஜ்ஜையுடனும் ஒரு தகர டப்பியைத் தம்முடைய மடியிலிருந்து எடுத்துக் காட்டினார்.

ஜட்ஜ், அது என்னவென்று கேட்கு முன்பே செட்டியார் வக்கீலை முன்னே தள்ளி, டப்பியை வாங்கித் திறந்து பார்க்கச் சொன்னார். அவ்வளவுதான்; ஒருவர் முகத்தை ஒருவர் மாறி மாறிப் பார்த்துக் கொண்டனர்.

ஜட்ஜுக்கு ஒன்றும் புரியவில்லை. "என்ன ஸார், என்ன? நீங்களே பரஸ் பரம் பார்த்துக் கொள்ளுகிறீர்களே? எனக்கு ஒன்றும் புரியவில்லையே! டப்பி யில் என்னதான் இருக்கிறது?" என்று கேட்டார்.

வக்கீல் :—ஒன்றுமில்லை; மோசடி! இவர் பெரிய தந்திரசாலி என்று தெரிகிறது!

ரமணி அய்யர் (ஜட்ஜை நோக்கி விநயத் துடன் கை கூப்பி):—ஸ்வாமி! நான் சொல்லுகிறேன். குழந்தைப் பருவம் முதல், எனக்கு ஊறுகாயில் பரமப் பிரீதி! கோர்ட்டார்கள் என்னை ஜெயி லுக்கு அனுப்பும் பட்சத்தில் இந்த ஊறுகாய் அங்கே கிடைக்காது என்று நினைத்து, இதைத் தயார் செய்து ஒரு டப்பியில் போட்டுக் கொண்டு வந்தேன்!

ஜட்ஜ் (புன்னகையுடன் வாதியின் வக்கீலைப் பார்த்து):—ஏன் ஐயா! இவ ருக்கு ஜெயில் படி கட்ட முடியுமா? செட்டியாரைக் கேட்டுச் சொல்லும்.

வக்கீல் தம்மைத் திரும்பிப் பார்க்கு முன்பே, "போதும் ஸ்வாமி, போதும்! இதுவரை செலவான பணமே போதும். இவருக்கு ஜெயில் படி வேறு கட்ட வேண்டுமா? ஏற்கெனவே நாம் தயா ரித்து எடுத்துக் கொண்டு போகும் ஊறு காயுடன் சௌக்கியமாகச் சாப்பிட்டுக் கொண்டிருக்க வேண்டுமா? வேண்டாம் ஸ்வாமி, வேண்டாம்!" என்று கத்தினார் செட்டியார்.

ஆஸ்தமா
வியாதியுள்ள
வர்களுக்கு
நான்
சொல்லுவேன்



இன்னுமா

தற்சமயத்திற்கு குணமளிக்கும் மருந்துகளை வாங்குவது முற்றிலும் வீண்.

''புரோகித் சுவாஸ ஹாரி'' தற்சமயத்திற்கு மட்டும் அல்ல ''ஆஸ்த்மா''வின் மூல காரணங்களையும் கண்டித்து நீடித்த குணத்தை அளிக்கும். சாப்பிட ஆரம்பித்ததுமே இளைறலை நிறுத்தி, ஜீரணத்தையும் அதிகரிக்கிறது. நாளடைவில் பலத்தையும் கொடுத்து ''ஆஸ்த்மா''வை வேரோடு ஒழிக்கும்.

''ஆஸ்த்மா'', இளைறல் (கஷ்ட சுவாசம்) முதுகுவலி, தொண்டை கர கரப்பு, இருமல், இன்னும் இதைப்போன்ற ஈரல் சம்பந்தப் பட்ட வியாதிகளுக்கு ''சுவாஸ ஹாரி''ப்ளெயின் (நீலப் பெட்டி) சாப்பிட வேண்டும். அஜீர்ணம், வயிறு உப்பிசம் உள்ள ஆஸ்த்மா வியாதி உள்ளவர்கள் ''சுவாஸ ஹாரி'' காம்பௌண்ட் (சிவப்பு பெட்டி) உபயோகிக்க வேண்டும்.

ஒவ்வொரு மருந்து கடைகளிலும் கிடைக்கும். 3, 6, 12 அவுன்ஸ் அளவுகளில் முறையே ரூபா 3-6-0; 5-12-0; 10-0-0. ஆக விலை.

தயாரிப்பவர்கள்:

புரோஹித் பார்மஸி, கோலாப்பூர், M.S.M.

சென்னை ஸ்டாக்கிஸ்டுகள்:

அப்பா அண்டு கோ., சைஹு பஜார்.
அமிருத்ரத்நகர் பார்மஸி,
கோவிந்தப்பநாய்க்கன்
தெரு.

திருவாங்கூர்
ஸ்டாக்கிஸ்டுகள்:

K. C. மாத்யூ & கோ.,
மருந்து வியாபாரிகள்.
கொழுஞ்சேரி.



புரோகித்ஸ் ஸ்வாஸஹாரி



# இந்த சோல்ஜர் கூறுகிறார்

''பிஸ்மாக்' — 'BISMAG' என் வயிற்று உபாதையை நீக்கும் வரை என்னால் கான்டீன் ஆகாரத்தைக் கொஞ்சம் கூட ரஸிக்க முடியவில்லை.'' இதில் அடங்கியிருக்கும் அஜீர்ணக் கோளாறுகளை நிவர்த்தி செய்யவல்ல, நம்பிக்கை வாய்ந்த சரக்குகள், வயிற்றிலுள்ள அதிகப்படி புளிப்பு அமிலத்தையும் சமனப் படுத்தி அஜீர்ணத்தின் சின்னங்களை ஒழித்து விடுகிறது. உங்கள் அருகாமையிலுள்ள வியாபாரியிடமிருந்து இன்றே 'பிஸ்மாக்' ('பைகரேடெட்' மக்னீஷியா) பௌடர் அல்லது பில்லைகள் வாங்குங்கள்.

'பைகரேடெட்' மக்னீஷியா




பிஸ்மாக் லிமிடெட்

பிராய்டன் ரோடு, லண்டன். N. 16

1759

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras



| | |
|---|---|
| சராசரம்<br>ஜனுர்தனு | HT. 121 |
| நந்த பாலா<br>ஜே ஹரே தயாளா | HT. 122 |
| னது உள்ளமே<br>பிருந்தாவனத்தில் | N. 18253 |
| எங்கும் நிறைந்தாயே<br>அரங்கா — யதுநந்தனு | N. 18254 |
| கிரிதர கோபாலா<br>உடல் உருக (விருத்தம்) | N. 18255 |
| காற்றினிலே<br>மறைந்த கண்டு | N. 18256 |
| மறவேனே<br>லீலைகள் செய்வானே | N. 18257 |

ஸ்ரீமதி

# எம்.எஸ். சுப்புலக்ஷ்மி

நடிக்கும்

# மீரா

பாட்டுகள்



## "ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்" ரிகார்டுகள்

எல்லா கிராமபோன் வியாபாரிகளிடமும் கிடைக்கும்

**தி கிராமபோன் கம்பெனி லிமிடெட்.,** டம்-டம், பம்பாய், மதராஸ், டில்லி, லாகூர்.